# வ.சுப. மாணிக்கனாரின் வாழ்வும் பணியும்



பதிப்பாசிரியர்

**டாக்டர் ச. மெய்யப்பன்**

**மணிவாசகர் பதிப்பகம்**

55, லிங்கி தெரு, சென்னை-600 001.

முதற்பதிப்பு: சூன், 1989
உரிமை: செறிவு

விலை: ரூ. 6-75

அனைத்திந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர்
21ஆவது கருத்தரங்க மாநாட்டில்
அண்ணாமலை நகரில் வெளியிடப் பெற்றது.

கிடைக்குமிடம்
மணிவாசகர் நூலகம்
12-B, மேல சன்னதி, சிதம்பரம-608001
14, சுங்குராம் தெரு, பாரிமுனை, சென்னை-600001
55, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை-600001
28-A, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625001
3/4 ராஜ வீதி கோயமுத்தூர்-641001
20, நந்தி கோயில் தெரு, திருச்சி-620002
சென்னை போன் : 512996, சிதம்பரம் போன் : 2799

அச்சிட்டோர்:
கே.பி.டி. இண்டஸ்ட்ரீஸ்,
அண்ணாமலைநகர்-608 002

# மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார்

## பற்றிய

## அறிஞர்களின் மதிப்பீடு

தமிழக முதல்வர் கலைஞர் கருணாநிதி அவர்கள் மூதறிஞர் வ.சுப. மாணிக்கனாரின் மறைவு குறித்து வழங்கிய

## இரங்கற் செய்தி

வற்றாத தமிழ்க்கடல் வ.சுப. மாணிக்கம் அவர்களின் திடீர்மறைவுச் செய்தி கேட்டுதிகைத்துப்போனேன். கடந்த இரண்டு கிழமைகளுக்கு முன்புதான் என்னை வந்து சந்தித்து நீண்டநேரம் உரையாடிவிட்டுச் சென்றார். இன்று இப்படியொரு செய்தி என்கிற போது தாங்கிக் கொள்ள இயலவில்லை. எத்தனையோ விழாக்களில் நானும் அவரும் கலந்து கொண்ட பசுமையான நினைவுகள் நெஞ்சில் அலைமோதுகின்றன. எப்போதும் தமிழ் தமிழ் தமிழ் என்றே ஒலித்துக் கொண்டிருந்த அந்த இனிய இதயம் இந்தத் தமிழகத்துக்கு வழங்கியுள்ள இன உணர்வினை எப்படித்தான் மறக்கமுடியும்!

ஏடுகள் பல அவர்புகழ்பாடும்-தமிழுக்கும் தமிழர்க்கும் அவர் ஆற்றிய தொண்டு நின்றுநிலை பெற்று, இளைய தலைமுறைக்கு ஒளிக்கதிராக என்றென்றும் விளங்கும்!

வாழ்க பெரும்புலவர்
மாணிக்கனார் அவர்களின்
மங்காப்புகழ்!

முத்தமிழ்க் காவலர்

## கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள்

பேராசிரியர் டாக்டர் வ.சுப.மாணிக்கம் அவர்களின் மறைவு தமிழுக்கும், தமிழர்க்கும், தமிழகத்திற்கும் பேரிழப்பாகும். அதிலும் தமிழகப்புலவர் குழுவிற்கு ஈடு செய்ய முடியாத இழப்பாகும்.

அப்பெருமகன் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திலிருந்து செய்த தமிழ்த்தொண்டுகளைவிட பதவியை விட்டு விலகிய பிறகு செய்த தமிழ்த்தொண்டுகள் மிகப் பலவாகும். அவர்தம் வாழ் நாளெல்லாம் தமிழகத்தில் "தமிழ்மொழி' பயிற்று மொழி யாகவேண்டும் எனப் பெரிதும் முயன்று, பாடுபட்டு, பலன்காணாமல், உயிர் நீத்த செய்தியை எண்ணி, எண்ணி, தமிழக மக்கள் அனைவரும் புண்பட்ட மனத்துடன் வருந்திக் கொண்டிருக்கின்றனர்.

யார், யாருக்கு ஆறுதல் கூறுவது? மெல்ல நகர்ந்து செல்லும் காலம்தான் நம் அனைவர்க்கும் நல்லாறுதல் அளிக்க வேண்டும்.

பேராசிரியர் **இராம. சேது நாராயணன்** அவர்கள்
துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் தமிழ்த் துறைத் தலைவரும், மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தருமான தமிழ் மூதறி ஞர் டாக்டர் வ.சுப.மாணிக்கனார் அவர்களின் மறைவு தமிழ் மொழிக்கும், தமிழ் மக்களுக்கும், தமிழ் நாட்டிற் கும் ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும். தமிழ்மொழிக்கு அரணாக, காவலனாக விளங்கிய அவரின் திடீர் மறைவு அனைவரையும் அதிர்ச்சிக் குள்ளாக்கியது. அவருடைய ஆழ்ந்த, பரந்த தமிழ் அறிவும், எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்ற கொள்கையைப் பரப்புவதற்கு அவர் தலைமை யேற்று நடத்திய பேரியக்கமும் அவருடைய தமிழ்ப் பற் றைப் பறைசாற்றும். அத்தகைய தமிழ்ப் பற்று மிக்க ஒரு தமிழரைக் காண்பது மிக அரிது. அவருடைய கனவுகள் யாவும் நனவாகவும், அவருடைய ஆத்மா சாந்தியடையவும் எல்லாம் வல்ல இறைவன் திருவருளைவேண்டுகிறேன்.

## முனைவர். ச. அகத்தியலிங்கம்
### துணை வேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம்

மூதறிஞர் முனைவர் வ.சுப. மாணிக்கனாரின் திடீர் மறைவு உண்மையிலேயே தமிழ் அறிஞர் உலகத்தை நிலைநடுங்க வைத்துள்ளது. மறைந்த மாணிக்கனார் பண்புமிக்க பெரியவர். தமிழின் பாலும் தமிழ் மக்களின் பாலும் மாறாத அன்பும், மறக்க முடியாத பரிவும் கொண்ட ஒரு மாபெரும் மனிதர். 'மானுடம் வென்ற தம்மா' என்ற கூற்றுக்கு ஏற்ப ஒரு நல்ல மனிதராக வாழ்ந்தவர். கொள்கைப் பிடிப்பும் செயலாண்மையும் தமிழின் மீது மாறாக் காதலும் கொண்டு விளங்கிய சொல்லேர் உழவர் அவர். தன்னுடைய எழுத்தாலும் பேச்சாலும், பிற செயல்களாலும் தமிழுக்கும் தமிழ்மக்களுக்கும் என்னென்ன செய்ய வேண்டும் என எண்ணி எண்ணிச் செயலாற்றியவர். எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்ற கொள்கைக்கு ஒரு கலங்கரை விளக்கமாக நின்றவர். ஆடல் வல்லான் ஆடுகின்ற அம்பலத்தில் அன்னைத் தமிழும் அரியாசனம் ஏறவேண்டும் என்று போராடி வென்ற பெருமையுடையவர். அவருடைய மறைவு நமக்கு ஈடு செய்ய முடியாத ஒரு பேரிழப்பாகும்.

இந்நூற்றாண்டு பல புதிய பெரிய சாதனைகளைப், படைத்துள்ளது. தமிழ் மறுமலர்ச்சி இயக்கம் இந்நூற்றாண்டில் விளைந்த ஒரு பேரியக்கமாகும். மறைமலையடிகள், திரு.வி.க., சோமசுந்தரபாரதியார், மு.வ, தெ.பொ.மீ, பரிதிமாற்கலைஞர், ராகவையங்கார். இரா.பி. சேதுப்பிள்ளை போன்ற பல தமிழறிஞர்கள் செய்த

பணியால்தான் இன்றைய தமிழுக்கு ஒரு ஆக்கம் நிறைந்திருக்கிறது என்று கூறுவர். இவ்வரிசையில் வைத்து எண்ணப்படுகின்றவர் மாணிக்கனார் என்றால் அது மிகையல்ல. அவருடைய இழப்பால் இத்தலைமுறையே மறைந்து விட்டது என்று எண்ணலாம்.

அப்பெருமகன் செய்த இலக்கியப் பணியும் அதனைச் சார்ந்த சமூகப் பணியும் என்றென்றும் என் நினைவில் நிற்பவையாகும். பலவாண்டுகள் அவரோடு பழகுவதற்குக் கிடைத்த வாய்ப்பு என் பெரும் பேறாகும்.

அவருடைய மறைவில் தமிழகம் ஒரு மூதறிஞரை ஒரு செந்தமிழ்ச் செம்மலை இழந்து நிற்கிறது.

---

## குமுதம்

மறைந்த தமிழறிஞர் வ.சுப. மாணிக்கம் பற்றி.

பழைமை நேசனாகவும் புதுமை விரும்பியாகவும் வாழ்ந்து, தமிழ் மொழியின் அகல நீள ஆழங்களை அளக்க முயல்வதிலும் தான் கண்டெடுத்த ரத்தினங்களை வரையாது வழங்குவதிலும் வாழ்க்கையைச் செலவழித்த-இல்லை, சம்பாதித்துக் கொண்ட - வள்ளல். 'புதுப் புதுத் தொடர்களைக் கோத்து ஒளி சிந்திய தமிழ்ச் சுடர்(லாபம் ஒன்றையே குறியாகக் கொள்வதைச் சந்தை நோக்கு என்பார். தனி மனிதரை ஆகா ஓகோ என்று தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடும் பழக்கத்தைத் தொழு நோய் என்பார்.) எழுத்தாற்றல் என்பது யாது? அதன் பயன் என்ன? வாசகர்கட்கு மனமெலிவைத் தராது மெலிந்த மனத்தை நிமிர்த்துவது. மின் அலை போல் புதுத் தெம்பு பாய்ச்சுவது, தற்சிந்தனையைக் கிளறுவது இதுவே எழுத்தின் அறுவடையாகும், என்ற கொள்கை உடைய 'ப'டைப்பாளி, தன் கணவனைக் கள்வன் என்று பழி சுமத்திக் கொலைத் தண்டனை விதித்த பாண்டிய னின் பல் தெறிக்கும்படி கண்ணகியின் சிலம்பு மணி தாக் கிற்று என்பதைக் கூறி (தருகெனத் தந்து தன் முன் வைப்பக், கண்ணகி அணிமணிக் காற்சிலம் புடைப்ப,மன்ன வன் வாய் முதல் தெறித்தது மணியே) பெற்றோரைப் பிரிந்த ஊமைக் குழந்தையிடம், அதைப் பல வகையிலும் பாதுகாத்து வருபவனைக்,காட்டி, 'இவன்தானே கொலை செய்தவன்?' என்று காவலன் கேட்க, அது கோபப்பட்டுக் குத்துவாளை எறிய, குற்றம் சொன்ன அந்த வாய் கிழி பட்டது என்று சினிமாப் படக் காட்சியுடன் (படம்:பூவிழி வாசலிலே) தொடர்புபடுத்தி, அழகும்நயமும் எங்கிருந்தா லும் சுவைக்கத் தக்கவையே என்று விளக்கிய மாணிக்கம்

முனைவர், கலைமாமணி **ஆறு. அழகப்பன்**
தலைவர், தமிழியல்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பீடுமிக்க தமிழ்த் துறையில் தமிழ்மொழிக்கு ஆக்கங்கள் பலபுரிந்த, ஒன்பது பேராசிரியப் பெருமக்கள் டாக்டர் வ.சுப மாணிக்கம் அவர்கட்கு முன்பு பணிபுரிந்துள்ளனர். அவர்கள்.

1. திரு.கா. சுப்பிரமணியப் பிள்ளை. எம்.ஏ;எம்.எல்.
2. திரு.ரா.பி.சேதுப்பிள்ளை. பி.ஏ.;பி.எல்.
3. திரு.சுவாமி விபுலானந்தர். பி.எஸ்ஸி (லண்டன்)
4. திரு.ச. சோம சுந்தரபாரதியார். எம்.ஏ;.பி.எல்.
5. திரு. பண்டிதமணி. மு. கதிரேசன் செட்டியார்
6. திரு.கா. சுப்பிரமணியப்பிள்ளை. எம்.ஏ;எம்.எல். (இரண்டாம் முறை)
7. திரு.தெ.பொ. மீனாட்சிசுந்தரம். எம்.ஏ;பி.எல். எம்.ஓ.எல்.
8. டாக்டர். அ. சிதம்பரநாதன் செட்டியார் எம்.ஏ; பி.எச்.டி.
9. திரு.லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார் பண்டித, வித்வான்
10. திரு.தெ.பொ. மீனாட்சி சுந்தரம் எம்.ஏ;பி.எல்; எம்.ஓ.எல். (இரண்டாம்முறை)
11. திரு.கோ. சுப்பிரமணியப் பிள்ளை எம்.ஏ;பி.எல்.

ஆகியோர்கள் ஆவார்கள்.

இவர்களின் சந்ததியாக டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் 1970–ஆம் ஆண்டு தமிழ்த்துறைத் தலைவராக நியமிக்கப்பட்டார்கள். ஆராய்ச்சி, கீழைப்புலம், கலைத் துறை என்று முப்பிரிவுகளாக இருந்த தமிழ்த்துறை ஒரு துறையாக்கப்பட்டது. மூன்று பேராசிரியர்கள் இருந்த இடத்தில் ஒரே தமிழ்ப்பேராசிரியராக இவர்கள் அமரர் முத்தையவேள் அவர்களால் நியமிக்கப்பட்டது டாக்டர் வ.சுப அவர்களின் நிர்வாகத் திறமையின்மீது அவர் கொண்ட நம்பிக்கையாகும்.

தமிழ்த்துறைத் தலைவராகப் பொறுப்பேற்றுக் கொண்ட டாக்டர் வ.சுப. அவர்கள் தந்நலங் கருதாது, குடும்பத் தினரைக் காரைமாநகரில் விட்டுவிட்டுத் தான்மட்டும் சிற்றறை ஒன்று எடுத்துக் கொண்டு ஏழாண்டுகள் தங்கி, சிற்றுண்டிச் சாலையில் உணவருந்தித் தமிழ்ப் பணி புரிந்ததால் தான் தமிழகத்தின் வரைபடத்தில் அண்ணா மலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறை ஒளியுள்ள இடமாக இப்போது விளங்குகின்றது.

பேராசிரியர், வ.சுப. அவர்கள் இங்குப் பணியாற்றிய பொழுது துறை சார்பாகக் கருத்தரங்குகள் நடத்தத் திட்டமிட்டுப் பெரு வெற்றி கண்டார்கள். சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்குறள், இலக்கணம் முதலிய பெருந் தலைப்புக்களில் அவர் நடத்திய கருத்தரங்குகள் வெற்றி பெற்றதோடு மட்டுமல்லாமல் நூல்வடிவிலும் அவை வெளி வந்தன.

இந்திய மொழிப்புலத்திற் கென்று இந்திய மொழிப்புல ஆய்விதழ் ஆண்டுதோறும் வெளியிடக் கூடிய முயற்சியில் வெற்றிகண்டார். ஆசிரியர்களை முனைவர் பட்டம்பெற ஊக்குவித்துப் பல ஆசிரியர்கள் அப்பட்டத்தைப் பெற

அடிவலிவானார். ஆட்சிக்குழு உறுப்பினராகவும் திகழ்ந்து தமிழ்வளர வழி வகுத்திட்டார்.

பல்கலைக்கழக மாணவராக இருந்து தொடக்கத்தில் இங்கேயே பணியாற்றி, துணைவேந்தராவதற்கு முன்பும் இங்கேயே பணியாற்றும் சிறப்பையும் பெற்றார். பல்கலைக் கழகத்தில் அவர் நிகழ்த்திய கம்பர், திருக்குறள், சிற்றிலக் கியங்கள் ஆகிய முப்பொழிவுகள் காலத்தைக் கடந்து நிற்கும் நல்ல ஆய்வுப் பொழிவுகள். அமரராகும் முன்பு இந்திய மொழிப்புல உறுப்பினராக இருக்கக் கேட்டுக் கொண்டதையும் மகிழ்வுடன் ஏற்றுக் கொண்டார்.

தாய்வீடு போல வந்து போகும் தன்வீடாக அண்ணா மலைப் பல்கலைக் கழகத்தை அவர் எப்பொழுதும் நினைத்துப் பேசுவார்; வருவார். அவரது அப்பழுக்கற்ற தமிழ்த் தொண்டால் தமிழ்நாட்டிலுள்ள இரண்டு பேரிருக்கைகட்குத் தலைவராக விளங்கினார். இந்தியத் தமிழாசிரியர் கழகத்தின் தலைவராகவும், தமிழகப் புலவர் குழுத் தலைவராகவும் இறுதிநாள்வரை இருந்தார்.

சப்பான், செர்மன், உருஷ்யா முதலிய நாடுகளெல் லாம் தாய்மொழிக் கல்வியினால் தான் முன்னேற்றமடைந் தன என்பதை யாவரும் அறிவர். தமிழ்நாடும் அவ்வகை யில் முன்னேற வேண்டும் எனத் 'தமிழ்மொழிவழிக் கல்வி இயக்கம்' என்ற அமைப்பை உருவாக்கி மாவட்டத் தலைநகரங்கள் தோறும் ஊர்வலங்கள் நடத்தித் தானே தலைமையேற்று நடந்துவந்த தமிழ்ச் சீரடியை மண்மகள் நன்கு அறிவாள்.

தமிழ்த்தாய் விரும்பும் அவரது அடிச்சுவட்டில் நடப் பதுதான் தமிழ்படித்தவர்களுடைய தலையாய கடன்.

வெல்க முனைவர் வ.சுப. அவர்களின் தமிழ் வழிக் கல்வியியக்கம்!

---

முனைவர் இரா. சாரங்கபாணி
சிறப்புநிலைப் பேராசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அண்ணாமலை யெனப் பிள்ளைத் திருநாமங் கொண்ட மாணிக்கனார் புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த மேலைச் சிவபுரியில் 17-4-1917 இல் சுப்பையா செட்டியார்க்கும் தெய்வயானை ஆச்சிக்கும் மகவாய்த் தோன்றினார். இளம்பருவத்திலே பெற்றோரை யிழந்த இவர் தம் பாட்டனாரால் புரக்கப் பெற்றார். பின் பர்மாவுக்குச் சென்று கடையிற் பணி புரிந்தகாலை பொய் கூற வேண்டிய கட்டாய நிலை ஏற்படவே அப்பணி துறந்து தமிழ்பயிலத் தொடங்கினார். பண்டிதமணி கதிரேசனார் முதலியோர்தம் உதவியால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் புலவர்வகுப்பிற் பயின்று முதன்மையாகத் தேர்ச்சியுற்றார். சில திங்கள் அப்பல்கலைக் கழகத்திலேயே ஆய்வு மாணவராகவிருந்து பின் ஏழாண்டுகள் அங்கேயே விரிவுரையாளராகப் பணியாற்றினார். அப்பொழுதே தனிமையாகப் படித்துப் பீ.ஓ.எல்., எம்.ஏ பட்டங்கள் எய்தினார். அதற்குப் பின் ஆய்வு மேற்கொண்டு தமிழில் வினைச்சொற்கள் பற்றி ஆய்ந்து எம்.ஓ.எல் பட்டமும் 'தமிழில் அகத்திணைக் கொள்கைகள்' பற்றி ஆய்ந்து பிஎச்.டி பட்டமும் பெற்றார். பின்னர் 1948 தொடங்கி இருபதாண்டுகள் காரைக்குடி அழகப்பர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் முதல்வராகவும் பணிபுரிந்தார். மீண்டும் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் போந்து, தமிழ்த்துறைத் தலைவராகவும் இந்திய மொழிப்புலமுதன்மையராகவும் தொண்டாற்றினார். பின் மதுரை-காமரா

சர் பல்கலைக் கழகத் துணை வேந்தர் பதவியேற்றுத் தமிழியல் வளர்ச்சிக்கும் பிற அறிவியல் துறைகளின் வளர்ச்சிக்கும் வழிவகுத்துத் துணை நின்றார். திருவனந்த புரத்தின் மொழியியற் கழக ஆய்வு முதியராக வேலை பார்த்த போது தமிழ் யாப்பு வரலாற்றை ஆங்கிலத்தில் எழுதினார். தஞ்சாவூர் தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் தொல்காப்பியத் தகைஞராகப் பணி செய்ததன் பயனாகத் தொல்காப்பியத்துக்கு அவர்தம் புத்துரை விளக்கம் கிடைத்தது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் பொன்விழாவில் இவர்க்கு டி.லிட்டுப் பட்டம் நல்கிச் சிறப்புச் செய்தது. குன்றக்குடி ஆதீனம் முதுபெரும் புலவர் என்னும் சிறப்புப் பட்டத்தையும் மேலைச் சிவபுரி சன்மார்க்க சபை செம்மல் என்றும் சிறப்புப் பட்டத்தையும் நல்கின.

தமிழ்ப் பல்கலைக் சழகத் தொடக்கநிலையில் செயன் முறைகளை வகுக்க அமைக்கப் பெற்ற வல்லுநர் குழுவின் தலைவராகவிருந்து அதன் வளர்ச்சிக்கு வழி வகுத்தார். தமிழகப் புலவர் குழுவிற்கும் இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்திற்கும் மேலைச்சிவபுரி சன்மார்க்க சபைக்கும் தலைவராகத் திகழ்ந்து இவர் ஆற்றிய பணிகள் மிகப்பல. காரைக்குடித் தமிழ்ச்சங்கம் நிறுவிச் சங்கவிலக் கிய வகுப்பு நடத்தியும் இளஞ்சிறார்க்கு அறநூல்கள் ஒப் பித்தல் போட்டி வைத்துப் பரிசுகள் வழங்கியும் ஒல்லும் வகையெல்லாம் தமிழ்த் தொண்டு செய்தார். தில்லையில் அம்பலத்தின்கண் நின்று திருமுறைகள் ஓதி வழிபடப் பேராசிரியர் வெள்ளை வாரணனார் போன்றோரின் துணையோடு போராடி வாகைசூடினார்.

வள்ளல் அழகப்பரின் கொடைவளம் ஏத்திக் 'கொடை விளக்கு' என்னும் கவிதைநூல் படைத்தார். இவர்தம்

தனிப்பாடல்களின் தொகுப்பு 'மாமலர்கள்' என்னும் பெயரில் வெளிவந்துள்ளது. இவர்தம் படைப்புக்களுள் வள்ளுவமும் தமிழ்க் காதலும் இருகண்களெனப் போற்றத் தக்கவை. தொல்காப்பியக் கடல், திருக்குறட்சுடர். சங்க நெறி, காப்பியப் பார்வை, இலக்கியச் சாறு,தமிழ்க் கதிர், தலைவர்களுக்கு முதலியவை இவர்தம் பிற படைப்புக்கள். திருக்குறளை யாவரும் எளிதில் புரிந்து கொள்ள 'உரை நடையில் திருக்குறள் என்னும் நூலை இயற்றியுள்ளார். மணிவாசகர் நூலக வெளியீடான கம்பர் என்னும் இவரது நூல் தமிழகப் பரிசு பெற்றது. தமிழ் யாப்பு வரலாறு, தமிழில் வினைச் சொற்கள், தமிழில் அகத்திணைக் கொள்கைகள் என்னும் நூல்கள் இவரால் ஆங்கிலத்தில் எழுதப் பெற்றவையாகும். மன்பதைதன் முன்னேற்றங் கருதி இவர் படைத்த நாடகங்கள் மனைவியின் உரிமை, நெல்லிக்கனி, உப்பங்கழி, ஒரு நொடியில் என்பனவாம்.

மழலையர் ஆங்கிலப் பள்ளிகளைத் தமிழ்ப்பள்ளிகளாக மாற்றவேண்டும். தொடக்கப் பள்ளி முதல் பல்கலைக் கழகம் வரை பயிற்று மொழி தமிழாதல் வேண்டும் என்னும் கொள்கையினைப் பரப்பத் தமிழ் வழிக் கல்வி இயக்கங் கண்டு அதனைத் தமிழகம் எங்கணும் நடத்தி வந்தார். எழுத்துச் சீர்திருத்தம் என்னும் பெயரில் எழுத்து மாற்றம் செய்து தமிழுக்கு ஊறுசெய்தலாகாது என்பதனைத் தம் கட்டுரைவழி அறிஞருலகத்திற்கு உணர்த்தினார். தமிழ்வழிக் கல்வி என்பதும் எழுத்துச் சீர்திருத்தம் தேவையில்லை என்பதும் அன்னாரின் இறுதிக் குறிக்கோளாக அமைந்தன.

இவர் எளிய தோற்றமும் உயரிய நோக்கமுங் கொண்ட பழுத்த தமிழறிஞர். சிறந்த சிந்தனையாளர்.

தனித்தமிழ் ஆக்கத்திற்குத் தாமே புதிய சொற்களைப் படைத்து எல்லா நிலையிலும் எங்குந் தமிழ்வளர ஓய் வென்பதறியாது உழைத்த உரஞ்சான்ற வித்தகர். அனைத் துக்கும் மேலாகப் பண்புவழி உலகினை நடத்தத் தம் மதி நுட்பத்தையும் நூற்புலமையையும் அசைவிலா ஊக்கத் தோடு பயன்படுத்தி வந்த சான்றோர். இருபதாம் நூற் றாண்டின் இறுதியில், இத்தலைமுறையில், பல நிலை யினும் சிறந்தோங்கித் தமிழ்ப் பணிக்காகவே வாழ்ந்து பண்பின் திருவுருவாகத் திகழ்ந்த மூதறிஞர், செம்மல் மாணிக்கனார் 24—4—89 இல் எதிர்பாரா வகையில் மறைவெய்தியது தமிழன்னையின் தவக்குறையேயாம்.

---

முனைவர் செ.வை. சண்முகம்
மொழியியல்துறை
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

பேராசிரியர் வ.சுப.மா. அவர்களின் நூல்முகமும் நேர் முகமுமே இரண்டு முகங்கள்

1954 ஆண்டு தமிழ் மாணவனாய் இருந்தபோது 'வள்ளுவம்' என்ற நூல் மூலமே எனக்கு அவர் அறிமுக மானார். அதைப் படித்த அந்தச் சமயத்திலே குறள் பற்றிய ஆய்வில் அந்த நூலின் தனி இடம் எனக்குப் புரிந் தது. பேராசிரியருக்குத் திருக்குறள் ஒரு ஆய்வுநூல் மட்டும் அல்ல; ஒரு வாழ்வு நூல். அதனாலே அவருடைய எல்லா நூல்களிலும் திருக்குறள் இழையைப் பார்க்கலாம்.

பேராசிரியரின் ஆய்வுக்களனில் இடம் பெற்ற மற் றொரு நூல் தொல்காப்பியம். அதுவே என்னுடைய ஆய் வோடுதொடர்புபடுத்திய நூல். 'தொல்காப்பியப் புதுமை' யும் தொல்காப்பியத்திறனும் பின்னர் 'தொல்காப்பியக் கடல், ஆய் மலர்ந்து மணம் பரப்பிக் கொண்டிருக் கும். அவருடைய தொல்காப்பிய நூல் முகங்கள் என் னைக் கவர்ந்தவை.

1972 இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைப் பேராசிரியராய் வந்த போது நேர்முகம் அறியும் வாய்ப்பு ஏற்பட்டது. நேர்முகம் எப்பொழுதுமே குறுகிய தொடர்பாகவே இருந்தது. அதற்கு ஆய்வின் அணுகுமுறை வேறுபாடு காரணமாக இருந்திருக்குமோ? அதே சமயத் தில் அவருடைய நேர்முகம் அவருடைய தமிழ் ஆய்வு பர வலாக இருக்கவேண்டும் என்ற பரந்த உள்ளத்தையும்

புலப்படுத்தியது. இதற்குரிய நேர்முகத்தொடர்பை ஏற்படுத்தியது இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றமே.

மன்றத்தின் தலைவராக அவர் எட்டு ஆண்டுகள் (உயிருடன் இருந்தவரை) இருந்தபோது நான்பொருளாளராய் இருந்து ஆய்வுக்கோவை வெளியிடும் பணியாலும் பங்குகொண்டிருந்தேன்.

அவர் ஆய்வுக்கோவை அச்சிட்டு வழங்குவதில் அதிக ஆர்வம் காட்டி வந்தார். அதற்குக் காரணம் தமிழ் ஆய்வு பரவலாக்கப்படவேண்டும்; கூடிய வரை எல்லாத் தமிழ்ப் பேராசிரியர்களும் ஆய்வு வேள்வியில் பங்குபெற வேண்டும் என்ற அவருடைய பரந்துபட்ட நோக்கமே. இதற்காக ஆசிரியர்கள் எழுதும் கட்டுரைகளைச் சீர்தூக்காமல் அப்படியே அச்சிட்டு வழங்கவேண்டும் என்பதில் தீவிரமாக இருந்தார். அப்படி வெளியிட்டதால் கட்டுரை ஆசிரியர்களிடையே கருத்துமோதல் வந்த போதும் தலைவர் என்ற முறையில் அவரவர் தனிப்பட்ட கருத்தாகக் கொண்டு மாறுபட்டகருத்தை மதிக்கும் கண்ணியத்தைக் கடைப்பிடிக்கும் நெறியை வற்புறுத்தினார். இதனால் கருத்து வேறுபாடு மனித உறவைப் பாதிக்காமல் காப்பாற்ற வழி காட்டினார். இதனாலே பேராசிரியர் தமிழ் ஆய்வுலகின் ஊக்கு சக்தியாய் எல்லோருக்கும் மானசீகப் பேராசானாய்த் திகழ்கிறார்

# பொய் சொல்லா மாணிக்கம்

பேராசிரியர் தி.அ. சொக்கலிங்கம்
தேர்வாணையர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

1979 ஆகஸ்ட் என்று ஞாபகம்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் முதுகலை வகுப்புகளுக்கு அட்மிஷன் முடிந்து கொண்டிருந்த நேரம்.

அட்மிஷன் குழுவின் பொறுப்பை நான் வகித்து வந்தேன். வந்த விண்ணப்பங்களை, திறமை, பிற்படுத்தப்பட்டோர். தாழ்த்தப்பட்டோர் என்று பகுத்துக் கொண்டு, மதிப்பெண் அடிப்படையில் அட்மிஷன் கொடுக்க வேண்டும்.

மதுரையிலேயே மிகப்பெரிய அரசு அதிகாரி ஒருவரின் மகளுக்கு அட்மிஷன் தேவை. மார்க்கும் 85 வரை வாங்கியிருந்தது. ஆனால் இதற்கு மேலே இருபது பேர் இருக்கிறார்கள்.

அந்த அரசு அதிகாரி ஒரு பெரிய தொழிலதிபர் மூலமாக துணைவேந்தருக்கு சிபார்சு கொண்டு வருகிறார். அவர் கொடுத்த குறிப்பை வாங்கி பத்திரமாக வைத்துக்கொள்கிறார் துணைவேந்தர்.

மறுநாள் அட்மிஷன் முடியப் போகின்றது. அன்று நான் துணைவேந்தரைச் சந்திக்கிறேன்.

'இன்றோடு அட்மிஷன் முடிகின்றது; இருக்கின்ற இடங்களை 'மெரிட்'படி போட்டு விடலாமா'-நான் கேட்கிறேன்.

'இதில் சந்தேகம் வர வேண்டிய காரணம் என்ன?'-துணைவேந்தர்.

சந்தேகம் ஒன்றும் இல்லை; நேற்று அந்தத் தொழிலதிபர் தங்களிடம் ஏதோ சிபார்சு......' என்று நான் சொல்லு முன் வாய் விட்டுச் சிரிக்கிறார் துணைவேந்தர். தான் வாங்கி வைத்திருந்த குறிப்பை மெதுவாகப் பையிலிருந்து எடுக்கிறார்-என்னிடம் காட்டுகிறார்.

'இந்த மதிப்பெண்ணுக்குக் கிடைக்குமா'?

'கிடைக்காது சார்'

'பிறகு என்ன கேள்வி? பெரியவர் கொடுக்கிறாரே என்று மரியாதையோடு வாங்கிப் பத்திரமாக வைத்திருக்கிறேன் அட்மிஷன் தரவேண்டும் என்ற அவசியமில்லை. இருக்கக் கூடிய இடத்தை வரிசைப்படி போட்டு விடுங்கள்'-இப்படி துணைவேந்தர் சொன்னதைக் கேட்டு என்னுள் வியப்பும் அவரிடம் மரியாதையும் ஏற்படுகின்றது.

அந்தத் துணைவேந்தர் தான் சமீபத்தில் காலமான டாக்டர் வ.சுப. மாணிக்கம்.

சின்ன வயசில் பர்மாவில் ஒரு வட்டிக்கடையில் கணக்குப்பிள்ளையின் கையாளாக இருந்து கடையைத் துப்புரவு செய்வது போன்ற எடுபிடி வேலைகள் செய்து வந்த வ.சு.ப. மாணிக்கம் உண்மை பேசிய காரணத்தால் வேலையிலிருந்து நீக்கப்படுகிறார். ஒரு நாள் அந்த முதலாளி 'மாணிக்கம்' நான் மாடிக்குப் போகிறேன். யாரும் தேடி வந்தால் நான் இல்லை என்று சொல்லி விடு' என்று கட்டளையிட-

'அப்படியெல்லாம் நான் பொய் சொல்ல மாட்டேன் என்று மாணிக்கம் சொல்ல, கோபப்பட்ட முதலாளி அன்றே அவருடைய சீட்டைக் கிழித்து இந்தியாவுக்கு அனுப்பி விடுகிறார். வறுமையில் கூட பொய் சொல்லாமல் வாழ்ந்த அவரைப் பொய் சொல்லா மாணிக்கம்' என்றே பலர் அழைக்கிறார்கள்.

உயர்நிலைப்பள்ளியையோ, கல்லூரியையோ எட்டிக் கூடப் பார்க்காமல் வெறும் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் மாத்திரமே படித்துப் புலவர் தேர்வில் வெற்றி பெற்று 'பிரைவேட்டாகவே' டாக்டர் பட்டம் வரை படித்து முடித்து முதல்வராகவும், துணைவேந்தராகவும் உயர்ந்த அதிசய மனிதர் டாக்டர் வ.சுப.மா. உழைப்பும், நாணயமும், நேர்மையுமே அவர் மூலதனம்.

காரைக்குடி அழகப்பரில் டாக்டர் வ.சுப.மா,முதல்வர். அப்போது அவருடைய மகனும் அதே கல்லூரியில் படிக்கிறார். கல்லூரியின் சட்டவிதிகளுக்கு மாறாக அவன் நடந்து விட்டான் என்பதற்காக ஒரு வருஷ காலம் மகனையே சஸ்பெண்ட் செய்து வைத்திருந்தார், 'அந்த மனுநீதிச் சோழ மாணிக்கம்'; அந்தக் காலத்தில் அதாவது 1965–70 – ல் கல்லூரி வளாகங்களில் பரபரப்பாகப் பேசப் பட்ட செய்தி இது. இந்த நேர்மைதான் அவரைத் துணை வேந்தருமாக்கிற்று.

வருஷா வருஷம் கல்லூரிகளில் புதிய பாடங்கள் தொடங்குவதற்கு அரசாங்கம் அனுமதி தரவேண்டும் இதற்கான கூட்டம் சென்னை கோட்டையில் மார்ச்.ஏப்ரல் மாசம் நடைபெறும். இப்படி நடைபெற்ற ஒரு கூட்டத்தில் துணைவேந்தர் டாக்டர் வ.சுப.மாவும் நானும் கலந்து கொள்கிறோம். காலை 7 மணிக்குப் பாண்டியன் எக்ஸ் பிரஸ் மூலம் சென்னை சென்று வழக்கமாகத் தங்கும் விடுதிக்குப் போகிறோம். அந்த விடுதியில் அன்றிலிருந்து புதிய உத்தரவு போட்டிருந்தார்கள். அதாவது எப்போது வந்து சேர்ந்தாலும் மதியம் 12 மணியிலிருந்து தான் நாளைக் கணக்கிடுவார்கள். (அதாவது செக் அவுட்டைம் மதியம் 12 மணி). நாங்கள் காலை 7 மணிக்குப் போய்ச் சேர்கிறோம். அப்போது ரூம் எடுத்தால் மதியம் 12 மணி

யோடு ஒரு நாள் கணக்கு (ஐந்து மணிநேரம் தங்க ஒரு நாள் வாடகை).

துணைவேந்தர் என் முகத்தைப் பார்க்கிறார் –

'பரவாயில்லை சார்; இரண்டு நாள் வாடகை கொடுத்து விடலாம்' என்று நான் சொல்ல, துணைவேந்தரோ 'நமக்கோ மதியம் 3 மணிக்குத்தானே கூட்டம்! சாமான்களை வரவேற்பறையில் வைத்து விடுவோம்! அப்படியே எங்காவது நடந்து போய் விட்டு 12 மணி வாக்கில் வருவோம்' 'பல்கலைக்கழகப் பணத்தை வீணாக்குவதுதவறு அல்லவா, என்று சொன்னதோடு அப்படியே செய்தும் காட்டினார்.

இப்படியெல்லாம் சிக்கனமாக இருந்த டாக்டர் வ.சுப.மா. பல்கலைக்கழக வளர்ச்சிக்காகப் பணத்தைத் தண்ணீர் போலச்செலவழிக்கவும் செய்தார்; கம்ப்யூட்டர், எம்.பி.ஏ., வணிகவியல், எனர்ஜி போன்ற பல துறைகளை உருவாக்கினார்—அது மாத்திரமல்ல; ஆசிரியரும் ஊழியரும் வீடுகள் கட்டப் பல்கலைக்கழகத்திலிருந்து கடதனுவியும் செய்தார். சொந்த வசதிகளைக் கவனியாமல் பல்கலைக்கழக வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக இருந்த அவருடைய பண்புகள் இப்போது நினைவுக்கு வருகின்றன.

மற்றொரு முறை சென்னையில் நடந்த கல்விக் கூட்டத்துக்கு அவருடன் போகிறேன். வருஷம் ஞாபகத்துக்கு வரவில்லை. அநேகமாக 1980 அல்லது 81 – ஆக இருக்கலாம்.

'கலைஞரைத் தெரியுமா' என்று கேட்கிறார்.

'ஓரளவு தெரியும். நான் முதல்வராக இருந்த கல்லூரிக்கு அடிக்கல் நாட்டியதே அவர்தான். அதன்பின் கட்டிடத்

திறப்பு விழாவுக்கும் அவர்தான் தலைமை தாங்கினார். எங்கள் கல்லூரிக்குக் கூட 'அட்ஷாக்' மானியமாக 1972 – இல் ஒரு லட்சம் கொடுத்தார்—என்றாலும் அவருக்கு என்னைத் தெரிந்திருக்க ஞாபகமில்லை. ஒரு வேளை கல்லூரியையும் சொல்லி என் பெயரையும் சொன்னால் தெரிந்து கொள்வார்' என்று நான் சொல்ல' இன்று கலைஞரின் மகன் திருமணம்' நாம் இருவரும் அதற்குப் போய்விட்டு அப்படியே கூட்டத்துக்கும் போகிறோம்' என்று ஆணையிடுகிறார்.

'கோபாலபுரத்துக்குப் போவதே தேசத்துரோகம்; கலைஞரைப் பார்ப்பது அதை விட பாவம்; அவரோடு பேசுபவர்கள் துரோகிகள்' என்று அன்றைய 'ஆளவந்தார் கள்' நினைத்தது மாத்திரமல்ல அப்படிப் போனவர் களையும் பேசியவர்களையும் 'ஒரங்கட்ட' ஆரம்பித்தார் கள். அந்தச் சூழ்நிலையில் டாக்டர் வ.சுப.மா. துணிவோ டும் நெஞ்சுரத்தோடும் கலைஞரின் கலியாண வீட்டுக்குச் சென்றதோடு வாழ்த்தியும் பேசினார் என்பதை நினைக் கும் போது வியப்பாக இருக்கின்றது. பதவி நீட்டிப்புக்காக என்னவெல்லாமோ செய்து வருகின்ற இன்றைய சூழ் நிலையில் அந்தப் பழைய நிகழ்ச்சியை நினைத்துப் பார்த்து 'இப்படியும் நெஞ்சுரம் கொண்ட சிலர் இருந் திருக்கிறார்கள்' என்று ஆறுதல் பெறுகிறோம்.

அவருடைய தமிழ்ப்புலமை பற்றி எதுவும் சொல்ல வேண்டியதில்லை. அதில் அவர் ஒரு 'இமயம்'. தமிழைப் பற்றிக்குறைத்துப் பேசச்சம்மதிக்கமாட்டார். 'திருக்குறள் படித்த தமிழாசிரியர்கள் அதற்கு மாறுபட்டு நடக்கிறார் களே' என்று யாரோ ஒரு தடவை சொல்ல, டாக்டர் வ.சுப.மா. வுக்குக் கோபம் வந்து விடுகிறது 'அது மனிதர் களுக்காக எழுதப்பட்டது – தமிழாசியர்களுக்காக மாத்திர மல்ல' இதற்கு ஏன் தமிழையும் தமிழாசிரியர்களையும்

சந்திக்கு இழுக்கிறீர்கள்' என்று வேகமாகச் சொல்ல, வந்தவர் தலைகுனிந்து கொள்கிறார்.

இந்த மார்ச் 30, 31 - இல் அண்ணாமலையில் பேராசிரியர் மெய்யப்பன் ஏற்படுத்திய அறக்கட்டளையின் முதல் சொற்பொழிவைச் செய்வதற்காக டாக்டர் வ.சுப.மா. அண்ணாமலை வருகிறார். துணைவேந்தரும் பிறரும் அவரைப் பல்கலைக்கழக முகப்பில் வரவேற்று மேள தாளங்களோடு அழைத்துச் செல்கின்றனர். 'அறக்கட்டளைச் சொற்பொழிவு செய்வதற்கு இவ்வளவு ஆர்ப்பாட்டமா? மேளதாளங்கள் தேவையா? துணைவேந்தரே வந்து பேச்சாளரை அழைத்து வர வேண்டுமா என்ன? —என்று எனக்கு நானே கேட்டுக் கொண்டேன். ஆனால் ...அதுதான் அவருடைய கடைசிச் சொற்பொழிவு என்பது எனக்கு எப்படித் தெரியும்?

ஏப்ரல் 17-இல்...

டாக்டர் வ.சுப. பெயரில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை அறக்கட்டளை ஒன்று நிறுவிற்று இந்த் இரண்டு சிறப்பு நிகழ்ச்சிகளும் அவர் மறைவை உணர்த்தும் 'முன் நிமித்தங்களாக' அமைந்தது ஆச்சர்யமாகத்தான் இருக்கின்றது. குகன்

(6.5.89) ஆனந்தவிகடனில் இக்கட்டுரையின் பெருமபகுதி. வெளிவந்தது.)

நன்றி—ஆனந்தவிகடன்'

---

# தமிழ்க் காந்தி

முனைவர் ச. மெய்யப்பன்

மூதறிஞர் வ.சு.ப. மாணிக்கனார் அவர்களை முப்பது ஆண்டுகளாக அறிவேன். 1970 இல் அண்ணாமலைப் பல் கலைக்கழகப் பேராசிரியராகப் பதவியேற்றது முதல் கடந்த இருபது ஆண்டுகளாக மிக நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிடைத்தது. அவருடைய தலையாய பண்பு சொல்லும் செயலும் ஒத்திருத்தல், மனத்தூய்மையுடன் எல்லா வினைகளையும் தூய்மையாகச் செய்தல். பதவி யில் உள்ள பொழுது ஒல்லும் வகையெலாம் பணிகள் செய்து பதவிக்குப் பெருமை சேர்த்தல் என்பன.

காலை 6மணி தொடங்கி இரவு 10மணி வரை படிப் பதும் எழுதுவதும் அவர்களுக்குப் பழக்கப்பட்ட செயல். திருக்குறள் பாட நூலாக ஓதப்படுவதைவிட, பின்பற்றப் படவேண்டிய நூல் என்பதனைத் தம் வாழ்வில் ஒவ் வொரு நிகழ்ச்சியிலும், பின்பற்றிக்காட்டினார்கள். அமைச் சர்கள். நீதிபதிகள், உயர் அலுவலர், பணிசெய்யும்போது "முடிவும் இடையூறும் முற்றியாங்கெய்தும் படுபயனும் பார்த்துச் செயல்" என்ற திருக்குறளைக் கருதிச் செயல் படுவார்களாயின் பிழை செய்து இரங்கும் நிலை ஏற்ப டாது என்பதை அடிக்கடி சுட்டிக் காட்டுவர்.

அவர்கள் பயணப் பெட்டியில் திருக்குறளும், திருவாச கமும் எப்போதும் இருக்கும்.

ஒவ்வொரு செயலையும் மிகுந்த பயன்விளையும் படி யாகவும், நெடுநாட்களுக்குப் பயன் தரும் படியாகவும்பண விரையம், காலவிரையம், மனித ஆற்றல் விரையம் ஆகாத

வாறு செய்வது அவர் இயல்பு.

அனைத்திந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மாநாட்டில் படிக்கப்படும் கட்டுரைகள் அனைத்தையும் தட்டச்சு செய்து வழங்கும் வழக்கத்தைத் தவிர்த்து அச்சிட்டு வழங்கும் அரியபெரிய செயலுக்கு வழி வகுத்தார்.

காலத்தையும், பொருளையும், சொற்களையும் வீணாக்காமல், பயன் படுத்தியவர்களில் மாணிக்கனார் பலருக்கும் வழிகாட்டியாகத் திகழ்ந்தார்.

அழகப்பா கல்லூரியில் ஆயிரக்கணக்கான தென்னை மரங்கள் வைத்துக் கல்லூரிக்குத் தொடர்ந்த வருவாய்க்கும் வழி செய்தார். மதுரைப் பல்கலைக்கழகத்தில்ஊழியர்களுக்குக் குடியிருப்பு வசதிகள் அமைத்ததும் கலைநுட்பம் நிறைந்த அழகுமிகு தோரணவாயிலை அமைத்ததும் இவருடைய பெருமைக்குச் சான்றாகும். அறிவியல் துறைகள் பலவற்றைப் புதிதாக உருவாக்கியதும் தமிழியல் துறை அமைத்ததும் வெளியீட்டுத் துறையைத் தோற்று வித்ததும் இவர் செயற் றிறத்திற்குக் காட்டுகள்.

ஒவ்வொரு ஆசிரியரும் முப்பத்தைந்து வயதிற்குள் டாக்டர் பட்டம் பெற்று விடவேண்டும். சொந்த வீடு கட்டிக் கொள்ளவேண்டும் என்று கூறி ஒவ்வொருவரும் இதில் முனைப்பாக இருக்க வேண்டும், என்று தம் உடனாசிரியர்களை நல்லாற்றுப் படுத்துவர்.

வ. சுப. பொய்மைக்கு மட்டும் பகைவர் அல்லர் புதுக் கவிதைக்கும், எழுத்துச் சீர் திருத்தத்திற்கும் பகைவர்.

ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டைச் சீரோடும் சிறப்போடும், நடத்தியது அவர் செயல் திறனுக்கு எடுத்துக்

காட்டு. தமிழையும், தமிழ் ஆசிரியர்களையும் குறைத்துப் பேசுபவர்களை எந்த உயர்பதவியிலிருந்தாலும் அனுமதிக்கமாட்டார்.

யாப்பியலில் தனித்திறம் சான்றவர். தமிழ்யாப்பின் சிறப்புக் கூறுகளை ஆய்ந்து ஆங்கிலத்தில் திராவிட மொழிகளின் ஆய்வு நிலையத்திற்கு எழுதி வழங்கியுள்ளார்.

மறைமலையடிகள், பாரதிதாசன், பாவாணர் வழியில் தமிழ் இயக்கத்திற்குத் தலைமை தாங்கினார். தமிழ் வழிக் கல்வி இயக்கத்தைத் தொடங்கி இறுதி மூச்சு வரை தமிழகம் எங்கும் பரப்பிவந்தார்.

திருமுறைகளைத் தில்லைக் கோவிலிலே பொன்னம்பலத்தில் பாட அனுமதியில்லாத ஒரு மரபை அறவே மாற்றி இப்போது அம்பலத்தில் பாடிவர வழி வகுத்தது வரலாற்றில் இடம் பெறத்தக்க தொன்று.

மொழி பயிலத் தொடங்கும் நாளிலேயே தாய் மொழி வழியே தான் கல்வி கற்பிக்கப் படவேண்டும். குழந்தைகளுக்குப் பிறமொழியைத் திணிக்கக் கூடாது. ஆங்கில மொழித்திணிப்பால் தமிழ்க் குழந்தைகள் மரபுதிரிந்து பண்பு கெட வாய்ப்பு ஏற்படுகிறது. மழலைகளுக்கு ஆங்கிலத்திணிப்பை எல்லா வகையிலும் தவிர்க்க வேண்டும் என்று அறுதியிட்டுத் தெளிவாக விளக்கினார். மழலையர் பள்ளி முதல் பல்கலைக் கழகம் வரை தமிழ் ஒன்றே பயிற்று மொழி யாதல் வேண்டும் என்பதனைப் பரப்பத் தமிழ் வழிக் கல்வியியக்கம் கண்ட தலைவர். இச் செயல் தமிழக வரலாற்றில் என்றும் தனியிடம் பெறத்தக்க சிறப்பினது.

பேராசிரியராகவும், கல்லூரி முதல்வராகவும் துணை வேந்தராகவும், விளங்கிய அவர்கள் நிழற்படம் எடுத்துக் கொள்வதில் விருப்பம் செலுத்துவதில்லை.

உயர்பதவியிலுள்ள ஒவ்வொருவரும் நூற்றுக்கு மேற் பட்ட படங்களைத் தொகுத்து வைத்திருக்கும் இந்நாளில் அவர் இறந்த வேளையில் தொலைக் காட்சியில் காட்டு வதற்கு ஒரு படம் கூடக் கிடைக்கவில்லை. பட்டம் பதவி களை நாடி அவர் அலைந்த தில்லை. பல நிறுவனங்கள் அவருக்குச் சிறப்பு செய்ய முயன்றும் அவர் மறுத்துள்ளார். அவர் எப்போதும் பரிசுப் பொருள்கள் பெற்றதில்லை.

தம்மைக்காண வருபவர் பழங்களைக் கொடுத்தாலும் அப்போதே உடனிருப்போருக்குப் பகிர்ந்து அளித்து விடு வார். நிறுவனங்களில் அலுவலர் சேர்ந்து சுருட்டும் பணத் தைக்"கூட்டுக் கொள்ளை" என வருந்தக் கூறுவார். தம் மிடம் பிறரைப் பற்றி யாரும் குறைவாகப் பேசுவதற்கு அனுமதிக்க மாட்டார். சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங் காப்பது அவர் இயல்பு.

வாய்மையும் தூய்மையும், எளிமையும் கடைப்பிடித்த **தமிழ்க் காந்தி** எனஅவரைச் சொல்லலாம். துணைவேந்தர் பதவிக் காலத்திலும் தூய்மையான வாழ்க்கை, எளியஉடை, காட்சிக்கு எளிமை தேவைகளை மிகவும் குறைத்துக் கொள்ளல் ஆகியவற்றைக் கடைப் பிடித்தார்.

தம் பணிகளைத் தாமே செய்து கொள்வார். எந்த நேரத்திலும் தம் சொந்த வேலைக்குப் பிறர் துணையை நாடாமல் தாமே முடிப்பார்.

எளிய உணவு, இயற்கை மருத்துவம், தாய் மொழிக் கல்வி, முதலியவற்றில் இயல்பாகவே ஈடுபாடு மிக்கவர்.

தாம் எழுதும் முன்னுரைகளில் கூட புத்தம் புதிய உவமைகளைப் படைப்பது அவர் இயல்பு.

சங்கப் புலவரனைய சான்றோராக வாழ்ந்தமாணிக்கனார் தெளிவான சிந்தனையும், கொள்கையில் உறுதியும் வெளியிடுவதில் துணிவும் கொண்டு தந்நிகரில்லாத தமிழ்ப் பேராசிரியராகத் தமிழகத்திற்கு வழிகாட்டியாக விளங்கினார்.

தமிழ் வழிபாட்டுத் தொண்டினை இறைவழிபாடாகக் கொண்டவர். பிள்ளையார் சுழிக்குப் பதில் "த" என்று தொடங்குவது இவரியல்பு. த-தமிழைக் குறிக்கும்.

நாடு, மொழி,இனம், அரசு, சமுதாயம், சமயம், கல்வி, பற்றிய இவர் தம் சிந்தனைகள் அனைத்தையும் மிகத் தெளிவாகத் 'தமிழ்க்கதிர்' என்னும் நூலில் விளக்கியுள்ளார்.

சிந்தனைகளில் கொள்கைத் தெளிவும் உறுதியும் பளிச்சிடக் காணலாம். இந்நூலில் தம்முடைய வாழ்க்கைக் கொள்கைகளையும் அறுதியிட்டு உறுதி செய்துள்ளார்.

---

# தமிழ் இமயம் வ.சுப.மா.

முனைவர் இரா.மோகன்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை

## புலமைத் திறனி

'திருக்குறள் உறுதியும் தெளிவும் பொருளின் ஆழமும் விரிவும் அழகும் கருதியும்...' என்பது கவியரசர் பாரதியாரின் வாக்கு.இதில் 'திருக்குறள்'என்ற சொல்லிற்குப் பதிலாக நாம் 'ஆய்வு' என்ற சொல்லைப்போடலாம்; பாரதியார் திருக்குறளுக்குக் கூறும் பண்புகள் யாவும் தரமான ஆய்வுக்கும் திறமான புலமைக்கும் வேண்டியனவே; தேவைப்படுவனவே. ஒரு சிறந்த ஆய்வாளர் தம் கொள்கையில் உறுதி படைத்தவராக விளங்க வேண்டும்; அவர் தம் ஆய்வின் முடிபுகளைத் தெளிந்த நடையில் வெளியிட வேண்டும்; அவர் மேற்கொள்ளும் ஆய்வுப் பொருள் ஆழமானதாக இருத்தல் வேண்டும்; எதிர்கால ஆய்வுலகம் தொடராய்வினை மேற்கொள்ளத்தக்க வகையில் அவரது ஆய்வு விரிவுடையதாக அமைய வேண்டும்; இலக்கியத்தின் அழகையெல்லாம் - நயத்தையெல்லாம் அவரது ஆய்வு எடுத்துக்காட்ட வேண்டும். இத்துணை-சிறப்புப் பண்புகளையும் ஒருங்கே பெற்ற மூதறிஞராகத் தமிழ்ச் செம்மலாக-ஆழ்புலமை சான்ற திறனியாக(Scholar Critic) வ.சுப. மாணிக்கம் விளங்குகிறார்.

## திண்ணிய நெஞ்சம்

வ.சுப.மா. நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் கொண்ட புலமையாளர் ஆவார். 'காமம் செப்பாது

கண்டது மொழியும்' மதுகை-வீறு-அவர் நெஞ்சில் என்றும் குடிகொண்டிருந்தது. இப்பண்பிற்குத் 'தமிழ்க் காதல்' என்னும் ஆய்வு நூலிலிருந்து ஒரு சான்றினைக் காணலாம். 'கரணத்தின் அமைந்து முடிந்த காலை நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சி' என்பது தொல்காப்பியக் கற்பியலில் இடம்பெற்றுள்ள ஒரு நூற்பா. 'பலரறிய மணச் சடங்கு நிகழ்ந்து முடிந்த காலத்துக் களவுக் காதலர்கள் நெஞ்சிலிருந்த கட்டு அவிழப் பெற்றுப் புணர்வர்' என்பது இந் நூற்பாவின் இயல்பான உரை. இவ்வெளிய இனிய கற்பியல் நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரை விளக்கம் தொல்காப்பியர் கருத்திற்கும் தமிழ் ஒழுக்கத்திற்கும் முற்றிலும் மாறானதாகும். 'உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினிய'ரே என்றாலும், மாறான-தவறான ஒரு கருத்தை அவர் வெளியிட்டிருந்தால், அதனை அப்படியே ஏற்றுக்கொள்ளாது 'ஒழுக்கமில்லுரை' என அதனை ஒதுக்கித் தள்ளுகிறார் வ.சுப.மா. 'கரணப்படி முதல் நாள் திங்களுக்கும் இரண்டாம் நாள் கந்தருவருக்கும் மூன்றாம் நாள் அங்கிக்கும் தலைவியை அளிப்பார்களாம்; இத் தெய்வங்களொடு அவள் பள்ளி செய்து ஒழுகுவாளாம்; இந் நாளெல்லை முடிந்த காலத்து அங்கியங்கடவுள் நான்காம் நாள் தலைவனுக்குத் தலைவியை அளிப்ப அவன் அவளை நுகர்வானாம்; வரைந்த பின் மூன்று நாளும் கூட்டமின்மையால் நிகழ்ந்த மனக்குறை-நெஞ்சு தளை-நாலாம் நாள் இரவின் புணர்ச்சியால் தீருமாம். இது வேத வழக்கு எனத் தலைவன் தலைவிக்கு விளங்கக் கூறுவானாம் என இவ்வாறு நச்சினார்க்கினியர் கருத்துரை செய்துள்ளார். தமிழர் கண்ட கற்பியல் இதுவா? தமிழினத்தின் நாகரிக ஏடான தொல்காப்பியத்துக்கு உரையா இது? இக் கருத்தெல்லாம் அல்தமிழ் நெறியென்று

அகற்றுக' என்று அழுத்தம் திருத்தமாக-ஆணித்தரமாகத் தம் கருத்தினை எடுத்துரைக்கின்றார் வ.சுப.மா. திறனாய்வாக ஒரு வரி எழுதினாலும் அதில் அவரது புலமை வீச்சு பளிச்சிடக் காணலாம். 'நாணிக்கண் புதைத்தல் என்னும் ஒரு துறைக் கோவை நூல் படிப்பார் நாணிக் கண் புதைத்தற்குரியதாக நிற்கின்றது'[2] என்னும் பகுதி இதற்குத் தக்க சான்றாகும்.

### தெளிந்த நல்லறிவு

பரம்பொருளிடம் விண்ணப்பிக்கும் போதும், வேண்டும் போதும் 'திண்ணிய நெஞ்சம் வேண்டும், தெளிந்த நல்லறிவு வேண்டும் என்றும், 'அறிவிலே தெளிவு நெஞ்சிலே யுறுதி... இவை அருளாய் என்றும் பாடுவார் பாரதியார். ஓர் ஆய்வாளர்க்கு மயக்கமோ கலக்கமோ குழப்பமோ இருக்கக் கூடாது; அவர் அறிவிலும் நடையிலும் தெளிவு (Clarity) இருத்தல் வேண்டும் 'உள்ளத்திலே உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும் என்னும் கருத்து கவிதைக்கு மட்டு மன்றி ஆய்வுக்கும் பொருந்துவ தாகும். திண்ணிய நெஞ்சம் கொண்ட வ.சுப.மா., தெளிந்த நல்லறிவு படைத்தவராகவும் விளங்குகிறார்; நெஞ்சிலே உறுதி கொண்ட வ.சுப.மா., அறிவிலே தெளிவு பெற்றவராகவும் இலங்குகிறார். அவரது தெளிந்த சிந்தனைக்கும் மொழிநடைக்கும் ஓர் எடுத்துக்காட்டு வருமாறு:

"மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்"

அகத்திணையின் அரிய நூற்பாக்களுள் இஃது ஒன்று.

---

1. தமிழ்க் காதல், பக். 92-93.
2. இலக்கியச் சாறு, ப.கககரு.

முதலடியில் அகத்திணைக்கு உரிய நிலைக்களத்தையும், பின்னடியில் அகத்திணை பாடும் இலக்கிய முறையையும் அறியலாம். ஐந்திணைக்காதலொழுக்கங்கள் எல்லாமக்களையும் கருதியது ஆதலின் இவற்றைத் தனியொருவர் பெயர் காட்டிப் புலவர்கள் பாடார் என்பது இந்நூற்பாவின் பொருள். தலைவன் பாங்கன் பாகன் பாணன் தகப்பன் அண்ணன்மார் எனவும், தலைவி தோழி செவிலி தாய் பரத்தை ஊரார் எனவும் ஐந்திணைக்கண் ஆண் பெண் மாந்தர்கள் வருவர். இவ்வாட்களைத் தலைவன் தலைவி தோழி என 'உறவுப் பெயராற்' கூறலாம்; நாடன் துறைவன் ஊரன் என 'நிலப் பெயராற்' கூறலாம். உழவன் உழத்தி ஆயன் ஆய்ச்சி எனத் 'தொழிற் பெயராற் கூறலாம்; ஆடவன், நம்பி சிறுமி நங்கைஎனப் 'பாற்பெயராற்' கூறலாம்; அவன் அவள் அவரெனச் 'சுட்டுப்பெயராற் கூறலாம். இவ்வாறு யார்க்கும் ஏற்கும் பொதுமையாகக் கூறுதலன்றி, இட்டு வழங்கும் பெயர்களாற் கூறுதல் ஆகாது. காவிரிப்பூம்பட்டினத்து மாசாத்துவான் மகன் கோவலன் என்பான் மாநாய்கன் மகள் கண்ணகியைக் காதலித்தான், மணந்தான், பின்னர் கணிகைக்குலமாதவியை நாடினான் என்றவாறு இயற்பெயரோடு மொழியலாகாது என்பது அக முறை. இம் முறையை விடுத்துக் கூப்பிடு பெயர் சுட்டிக் காதல் புனையப்படு மாயின், அக் காதல் எத்துணைச் சிறந்ததாயினும், அகத்திணைப்பாற் படாது என்பது இலக்கணத் துணிபு."

அகத்திணையியலின் அரிய இந் நூற்பாவுக்கு வ.சுப.மா. எழுதியுள்ள ஆய்வு விளக்கமும் அரிய ஒன்றாகவே அமைந்துள்ளது. இங்ஙனம் 'உள்ளங்கை நெல்லிக்

---

3. தமிழ்க் காதல், பக். 304-305.

கனி போல் - வ.சுப.மா.வின் மொழியிலேயே கூற வேண்டுமானால் 'நெற்றித் திலகம். போல்-ஆய்வு உண்மை களை எழுதிச் செல்வது என்பது அவருக்குக் கைவந்த ஒன்றாகும்.

**திறமான புலமை**

ஓர் ஆய்வாளர் ஆய்வின் அனைத்துப் பரிணாமங் களையும்-பரிமாணங்களையும்- நன்கு அறிந்தவராக இருத் தல் வேண்டும். ஆழமான அறிவின் அடிப்படையிலேயே திறமான புலமை அமையும். நுண்ணிதின் நோக்காது நுனிப்புல் மேயும் மனப்பான்மை கொண்டோரை 'இலக்கிய மேலோடிகள்' [4]என்னும் தொடரால் சாடுவர் வ.சுப.மாணிக்கம். இலக்கியத்தை அதன் உள்ளும் புறமும் சென்று ஆராயும் நுண்மாண் நுழைபுலம் படைத்தவர் அவர். தாம் மேற்கொள்ளும் ஆய்வுப் பொருளின் ஆழத்தை எடுத்துக்காட்டுவதில் அவருக்கு நிகர் அவரே. 'திறனாய்வு என்பது ஒப்பாய்வன்று, உள்ளாய்வு. புறனாய் வன்று, அகனாய்வு என்பது அவரது கருத்து.

வ.சுப.மா.வின் ஆய்வு வன்மைக்கு-ஆழமான புலமைக்கு அவரது 'கம்பர்' என்னும் நூலிலிருந்து ஓர் எடுத்துக்காட்டி னைக் காணலாம். 'களங்களை உணர்ச்சி மோதும் பெருங் களம் ஆக்குதல், களங்களை அமைக்காதே ஒழித்தல்,களங் களைக் காலம் பார்த்து அமைத்தல் என்பவையெல்லாம் காப்பிய நெறிகள் ஆகும். இந்நெறிகளின் கரையைக் கண்டவர் கம்பர்' என்னும் கருத்தினை விளக்கும் போது, 'புலவன் படைத்த களங்கள் யாவை? படையாதே விடுத்த களங்கள் யாவை? என்ற இரு பெரு நோக்கில் காப்பிய

---

4. திருக்குறட் சுடர், ப.34
5. கம்பர்,ப.9.

வளர்ச்சியை ஆராய வேண்டும். மேனாட்டுத் திறனாய் வாளர் தம் ஆராய்ச்சியெல்லாம் படைத்த களங்களைப் பற்றியவையே. வெளிப்பட்ட அமைப்புக்களை வைத்துக் கொண்டுதான் அத்திறனிகள் விளக்கஞ் செய்துள்ளனர். காப்பியத் தெளிவுக்கு உண்மைக் களவாராய்ச்சியும் உடனிலையாக வேண்டும். இது செய்யாதவரையில் புலவன் நுழைபுலம் வெளிப்படாது'[6] என்றும் ஆழமான ஆய்வு முடிவினை வெளியிடுகிறார் வ.சுப.மா. வனம் புகுமுன் தயரதன் இராமன் சந்திப்பைக் கம்பர் முற்றும் தவிர்த்து விடுகிறார்; அதே போல் அண்ணனுடன் வனஞ் செல்ல நினைத்த இலக்குவன் தன் மனைவி ஊர்மிளையிடம் சொல்லிக் கொண்டதாக அவர் பாடவில்லை; காப்பிய நடப்புக்கு வழியடைக்கும் கல்லாகும் என்று கருதி இராவணன் அரசவையில் மண்டோதரிக்கு அவர் இடங் கொடுக்கவில்லை. இங்ஙனம் கம்பர் படையாது விடுத்த சிலகளங்களைச் சுட்டிக் காட்டி வ.சுப.மா. எழுதியிருக்கும் ஆய்வுக் குறிப்புக்கள் அவரது நுண்மாண் நுழைபுலத்திற்குத் தக்க சான்றுகளாகும்.

**புதுமைப் பார்வை**

அரைத்த மாவையே அரைப்பது போல் முன்னோர் சொல்லிச் சென்றதையே மீண்டும் சொல்லுவது – வேறு வடிவில் சொல்லுவது-ஆய்வு ஆகாது. ஒரு தேர்ந்த ஆய்வாளர் இதுவரை யாரும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளாத ஒரு பொருளை எடுத்துக் கொண்டு ஆராய்வார்; ஆய்வினைப் புதிய கோணத்தில் பார்த்துப் புதிய விளக்கத்தினைத் தருவார். இவ்வகையில் தமிழ் ஆய்வுலகில் வ.சுப. மா,வுக்கு முதல் வரிசையில் முதலிடம் உண்டு. இதுகாறும் ஆய்வாளர் கண்ணில் படாத எத்தனையோ பொருள்களை

6. கம்பர், பக். 90-91

அவர் கட்டுரைச் சிந்தனைக்கு உரியவையாக்கி யுள்ளார். ஓர் எடுத்துக்காட்டு: 'துறையாசிரியர்களின் உரைநடை' என்னும் தலைப்பில்அவர் எழுதியுள்ள 23 பக்கக் கட்டுரை. இக்கட்டுரை தமிழ் உரை-நடை வரலாற்றில் துறையாசிரி யர்களின் உரைநடை என்ற ஒரு தொல்பகுதி இதுகாறும் இடம்பெற்றிலது என்பதனைத் தமிழுலகிற்கு முந்துற எடுத்துக்காட்டி, அப்பெருமக்கள்தம் புலமை, நடை முதலான சில கூறுகளை நன்கு புலப்படுத்துகின்றது; 'நூலாசிரியர், உரையாசிரியர், நூலுரையாசிரியர், பாடலாசிரியர், தொகுப்பாசிரியர் என்ற கூட்டத்தோடு இதுவரை தமிழுலகம் மறந்திருந்த துறையாசிரியர் என ஒரு கூட்டத்தையும் தமிழ் வளர்ச்சியில் நாம் கூட்டிக் கொள்ள வேண்டும் என வலியுறுத்துகின்றது.[7]

சிலப்பதிகாரம் என்னும் பெயர் சிலம்பு காரணமாக வந்தது என்பது வெளிப்படை. எனினும் அச் சிலம்பு எது? யாருடையது? கண்ணகியின் காற்சிலம்பே காப்பியத்தின் பெயருக்குக் காரணம் என்று நாம் அறிவோம். வேறுவகையாக நினைத்துப் பார்க்க அறியோம். வ.சுப.மா. வோ 'எந்தச் சிலம்பு' என்னும் தலைப்பில் ஓர் அரிய ஆய்வுக் கட்டுரையினை எழுதியுள்ளார். அதில் அவர் கோப்பெருந்தேவியின் தொலை சிலம்பே சிலப்பதிகாரப் பெயருக்குக் காரணம் என்பதைத் தக்க சான்றுகளோடு நிறுவியுள்ளார். 'சிலப்பதிகாரப் பெயர் பற்றிய என் ஆராய்ச்சி முன்னையோர் ஒருமுகமாகக் கூறிவரும் கருத்துக்கு முற்று முரணாக இருந்தாலும், உண்மை காண முயலலும் கண்ட உண்மையை வலியுறுத்தலும் தமிழ் மாணவர்

7. ஒப்பியல் நோக்கு, பக். 131-153.
8. காப்பியப் பார்வை, பக். 87-104

கடனாகும். இக் கடமையுணர்ச்சியே என் கருத்தை வெளியிடத் தூண்டிற்று, எனக் கட்டுரையின் முடிவில் அவர் முத்தாய்ப்பாகக் கூறியிருப்பது ஆய்வாளர் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒன்றாகும்.

முன்னையோர் சிந்தனையினின்று வேறுபட்டுப் புதிய கோணத்தில் சிந்திப்பது என்பது வ.சுப.மா. தம் ஆசிரியர் பண்டிதமணியிடமிருந்து கற்றுக் கொண்ட பாடமாகும். 'உயர்நிலைப் பாவலர் மயர்வற ஆக்கிய விழுப்பொருள் நிறைந்த செய்யுள்களின் சொற்பொருள் ஒருக்கில், நம் நுண்ணறிவு எதிரேறிச் செல்லல் வேண்டும் அங்ஙனஞ் சென்று அச்சொற் பொருள்களின் வன்மை வனப்புகளை ஆராய்ந்தளக்க முயவின், அச் செய்யுளாசிரி யன் ஆழ்ந்து நினைவிற் கண்டுவைத்த அரும்பொருண்மணி களின் இயலொளியை உண்மையாகக் கண்டு இன்புற லாம். ஆராய்ந்து தெளிவதற்கு முன் அச்சொற் பொருள களோடு எதிர்த்து நிற்றலே நன்றாகும். என்பது பண்டித மணியின் கருத்து, ஓர் கருத்திற்கு ஏற்ப வ.சுப.மா. பண்டைச் சான்றோர் பாடல்களின் சொற்பொருள் களோடு எதிர்த்து நின்ற இடங்கள் பலவாகும்; அச்சொற் பொருள்களின் வன்மை வனப்புகளை ஆராய்ந்து வெளியிட்டுள்ள இடங்கள் மிகப் பலவாகும். ஓர் எடுத்துக்காட்டு: பிசிராந்தையாரின் 'யாண்டு பலவாக நரையில ஆகுதல் எனத் தொடங்கும் புறப்பாட்டை 'வரிசைப் பாட்டு' எனச்சிறப்பித்துக் கூறுகிறார்வ. சுப.மா. அதில் வரும் ஓர் அடி 'யான் கண்டனையர் என்இளையர். என்பது. 'இளையர்' என்பதற்கு 'ஏவலாளர்' என்று இது காறும் பொருள் சொல்லப்பட்டு வருகின்றது; வ.சுப.மா வோ. 'உடன்பிறப்பினர்' எனப் புதிய பொருளை உரைக்

---

9. பண்டிதமணி, உரைநடைக் கோவை (இரண்டாம் பகுதி),ப.46

கின்றார், “மனைவி, மக்கள், வேந்தன், ஊர்ச் சான்றோர் என்போர் இயல்பான தொடர்பினர். விலக்க முடியாத உறவு நிலையினர். அந்நிலையினரோடு எண்ணத் தக்க வர் அல்லர் ஏவலாளர்; விலக்கற்கும் உரியர் ஆதலின் ‘என் இளையர்’ என்பார் உடன்பிறப்பினரே ஆவர். ‘மாண்ட என் மனைவி’ என்ற நடையை ஒப்பு நோக்குக எனத் தம் கருத்திற்கு ஏற்ற விளக்கத்தினை எழுதிச்செல் கின்றார்.

பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையிடம் காணப் படுவது போல் வ.சுப.மா.விடமும் தம் ஆய்வின் இடையே எதிர்கால ஆய்வுக்கான வித்துக்களைத் தூவிச் செல்லும் போக்கினைச் சிறப்பாகக்காண முடிகின்றது. ‘உரையாசிரி யர்களின் எடுத்துக்காட்டுக்கள் என்று தலைப்பிட்டு ஒரு நூல் வடிவில் பெரிய ஆராய்ச்சி செய்யத்தகும் என் பதனை என் சொற்பொழிவு மறைமுகமாகப் புலப்படுத் தும்,2 என்றும், ‘சங்கப் பனுவலில் வந்து கிடக்கும் காமப் பள்ளிக் குறிப்புக்கள் பலப்பல. இந் நுணுக்கங்கள் ஒருதனி நூலுக்கு உரியவை. என்றும் வ.சுப.மா. எழுதியுள்ள குறிப்புக்கள் இவ்வகையில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை.

**நயம் உரைத்தல்**

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பொருளின் அழகையும் ஆற்றலையும் வெளிப்படுத்துவது ஆய்வாளரின் தலையாய கடனாகும். இவ்வகையிலும் வ.சுப.மா, தம் ஆசிரியர் பண் டிதமணியாரை அடியொற்றிச் செல்கின்றார். அவர் தம்

10. சங்க நெறி, பக். 83-84
11. தொல்காப்பியக் கடல், ப. உகரு.
12. தமிழ்க் காதல், ப.403.

ஆய்வில் இலக்கிய நாடித் துடிப்புடைய இடங்களைத் தேர்ந்து, அவற்றின் நயங்களை நோக்கு முறையில் சுவை படக் காட்டுகின்றார். 'இலக்கிய நயம் பல வகைப்படும். அறிவு தித்திக்குமாறு சொல்வது பொருள் நயம் எனப் படும். இதனால் கருத்தின் அருமைகளையும் புலவரின் சிந் தனையையும் புரிந்து கொள்கின்றேன்'[13] என்னும் அவ ரது கருத்து இங்கே நினைவுகூறத்தக்கதாகும்.

'இம்மை மாறி மறுமை யாயினும்
நீயாகி யர்எங் கணவனை
யானா கியர்நின் நெஞ்சுநேர் பவனே'

என்பது அம்மூவனாரின் புகழ் பெற்ற குறுந்தொகைப் பாடல் (49). இப்பாடலுக்கு வ.சுப.மா. எழுதியுள்ள அரிய பொருள் விளக்கம் – நயக் குறிப்பு – வருமாறு:

"தலைவன் பெரும்பரத்தன், இன்பத் துறையில் மிக எளியவன் என்பதற்காகத் தமிழ்ப் பெண் நெஞ்சுமாறாள், இல்லறம் துறவாள். இல்வாழ்க்கையை ஆடாது அசையாது நிலைகாக்கும் தூண் போல்பவள் பெண் என்பது தமிழி யம். 'எப்பிறப்பிலும் என் கணவன் நீயாவாய்; நின் ஒழுக்கம் எவ்வாறாயினும், நின் மனத்துக்குப் பிடித்த மனைவியாக நான் இருப்பேன்' என்பதன்றோ உறுதியெனப்படும்? 'என் ஒழுக்கம் நின் ஒழுக்கத்தைப் பொறுத்தது, நீ திரியின் எனக்கும் திரிபேற்படாதா?' என்று சொல்லுதல் ஊதிய முறையாகுமே யன்றி ஒழுக்கப் பெற்றியாகாது. திரிந்தவ னைத் தான் திரியாது திருத்துதல் சால்பாகும்; திரிந்தவ னால் திரிவுபடுதல் கயமையாகும். பண்டைத் தமிழ்ப் பெண்டிர் தாம் என்றும் நிலை திரியாத் திண்ணியர். அத் திண்ணிய அன்பினால் கணவனைத் திருத்த முயலும்

---

13. இல்க்கியச் சாறு 'ப' 169-

,நெறியினர், இஃது தமிழர் கண்ட இல்லற நாகரிகம். இம்மை மாறி மறுமையாயினும்' என்ற உறுதித் தொட ரைக் கேட்கும் ஆடவனது மனம் சிறிது சிந்திக்கும். 'நீயா கியர் எங்கணவனை' என்ற அன்புத் தொடரைக் கேட்கும் போது திருந்தும் எண்ணம் பிறக்கும். 'யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே' என்ற பண்புத் தொடரைக் கேட்கும் போது, இப் பிறப்பிலேயே அவளின் நெஞ்சு நேர்பவனாக ஆக வேண்டும் என்ற கருத்துத் தோன்றி, ஆகினேன் என்று சொல்ல மாட்டானா மானம் மிக்க ஆண்தகை''[14]

இங்ஙனம் பண்டைத் தமிழ்ப் பெண்டிரின் சிறப்பியல் பினையும், பண்டைத் தமிழர் கண்ட இல்லற நாகரிகத் தினையும் அம்மூவனாரின் ஒரு குறுந்தொகைப் பாடலைக் கொண்டு வ.சுப.மா. வெளிப்படுத்தியிருக்கும் பாங்கு நெஞ்சை அள்ளுவதாகும்.

'தாமரை தண்தாது ஊதி மீமிசைச் சாந்தின் தொடுத்த தீந்தேன் போல' அன்னைத் தமிழ் மொழி அரு மையானது; இனிமையானது, அருந்தமிழுக்கு மூதறிஞர் வ.சு.ப மாணிக்கம் ஆற்றியுள்ள தொண்டு நிலத்திலும் பெரிது; வானினும் உயர்ந்தது; கடலினும் ஆழம்மிக்கது; ஒல்லும் வகையெல்லாம் துறைதொறும் துறைதோறும் தொண்டாற்றிய வ.சுப.மா. வால் தமிழ் தகுதி பெற்றது: தமிழால் வ.சுப,மா. தகுதி பெற்றார். இலக்கிய உலகில் தமிழ் இமயமாக அவர் என்றும் நின்று நிலவுவர்.

---

14.தமிழ்க் காதல், பக்.341-42

முனைவர் பா. வளன் அரசு
பாளையங்கோட்டை

மேலைச் சிவபுரியில் எழுபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய மூதறிஞர் வ.சுப.மாணிக்கம் அவர்கள் தொல்காப்பியர் வழியில் மொழிப்பணியும் திருவள்ளுவர் நெறியில் பொதுப் பணியும் செய்திடும் திறன்மிக்கவராகத் திகழ்ந்தார். எழுத்தாலும் பேச்சாலும் செயலாலும் விழுமிய தமிழ்த் தொண்டராக விளங்கினார் எல்லா அறிவும் தமிழ் வாயிலாகப் பெறலாம் என்ற நிலைக்குத் தமிழ் மொழியை வளப்படுத்த விழைந்து உழைத்தார்.

ஒல்காப் புகழ்த் தொல்காப்பியரை நினைந்து போற்றி "தொல்காப்பியப்புதுமை" யினைத் தெளிவுறுத்தியுள்ளார் மொழி மற்றும் வாழ்வுக்கு இலக்கணம் வகுத்த-தொல்காப்பியரை நற்றமிழர் நாளும் ஏற்றுப் போற்றிட வலியுறுத்தியுள்ளார்.

திருக்குறளின் அருமை பெருமைகளை எல்லோரும் பல்லாற்றானும் ஓதி உணர்வதற்கு "வள்ளுவம்" என்னும் தெள்ளு தமிழ்க் கருவூலத்தை வழங்கிய மூதறிஞர் பத்துக் கற்பனைச் சொற்பொழிவுகள் வாயிலாக வித்தகமான விளக்கம் நல்கியுள்ளார்; விரைந்து படிக்காமல் விளங்கிப் படிக்க வேண்டும் என வழிகாட்டியுள்ளார். "உரைநடையில் திருக்குறள்" வாயிலாக வள்ளுவக் கொள்கையினை எளிதாகவும் தெளிவாகவும் மக்கள் உணர வழிவகுத்துள்ளார். திருக்குறள் இந்தியநாட்டின் தேசிய இலக்கியமாகத் திகழ வேண்டும் என நிறுவியுள்ளார்.

தமிழ்ப் பரவலுக்கும் ஆராய்ச்சி யூற்றுக்கும் இடமாக "இரட்டைக் காப்பியங்கள்" என்னும் பதிப்பு நூலில் சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய இரு காப்பியங்களின் கதைச் சுருக்கத்தையும் திறனாய்வையும் தந்து காப்பியங் களுக்கு அடிவரையறை செய்து மதிப்புமிக்க முறையில் பதிப்பித்துள்ளார். நுண்ணறிவாளர் பலர் உருவாகும் வகையில் "சிந்தனைக் களங்கள்" என்னும் நூலை அருளியுள்ளார்: "எவ்வகை இலக்கியத்தையும் வாழ்க்கை நோக்கத்திற்கே பயன்படுத்தல் வேண்டும், நல்வாழ்வு தருவது உணர்ச்சி ஒழுங்கு. இவ்வொழுங்கினைத் தருவது இலக்கியம் என்பது என் தெளிவு" என்று மொழிந்துள்ளார். "நம் எழுத்தாளர்கள் சிறுசிறு தொடர்களையே உரை நடையமைப்பாகக் கருதிப் பின்பற்றாது, சிந்தனையளவுக் குத் தக்க தொடரளவை ஏற்ற பெற்றி அமைக்க வேண்டும்" என்று எதிர்பார்க்கிறார். "கால அடிப் படையில் ஆற்றொழுக்காக இயலும் ஓர் இலக்கியப் பாகுபாடு முறையான இலக்கிய வரலாற்றுக்குத் தேவை" எனத் தெரிவிக்கின்றார்.

'சொல்லின் செல்வர்' இரா.பி.சேது வழங்கிய சொருணாம்பாள் அறக் கட்டளைச் சொற்பொழிவாகக் ''கம்பர்' குறித்துக் காப்பியப் பார்வை, காப்பியக் களம் காப்பிய நேர்மை ஆகிய மூன்று தலைப்புகளில் ஆற்றிய பேருரையில், "இராமாயண மூலநோயைக் குணப்படுத்த. வும், முழு நூற்பார்வை தோன்றவும், குருதியோட்டம் போன்று சிந்தனையோட்டம் செழித்தோங்கவும் வழி முறைகள் விளம்பியுள்ளார். தலைவர்கள் தவறினால் உலகமும் ஏழை உயிர்களும் எவ்வளவு தொல்லையும் இழப்பும் பட நேரிடும் எனக் காட்டியுள்ளார்.

வள்ளல் அழகப்பர் புகழ்த்திறத்தைச் சிறப்பாக

எடுத்தியம்புகிறது. "கொடை விளக்கு" என்னும் பா நூலில் ஆசிரியப் பணியாற்ற வாய்ப்பு வழங்கிய வள்ளல் அழகப்பரை நன்றியுடன் நினைந்து போற்றுவர். தமிழில் புலமை நலம் பெறப் பேருதவி புரிந்த பண்டிதமணி கதிரேசனாரை நினைவு கூர்ந்து, தன் இல்லத்திற்குக் "கதிரகம்' எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தார். பாவலர் முடியரசன் அவர்களைக் கொண்டு "ஊன்றுகோல்" என்னும் நூல் எழுதச் செய்தும், மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழியல் கருத்தரங்க ஆய்வுக் கூடத்திற்குப் பண்டிதமணி அரங்கம்" என பெயர் வழங்கச் செய்தும் போற்றிப் புகழ்ந்தார்.

"மனைவியின் உரிமை' "நெல்லிக்கனி" போன்ற நாடகங்கள் நாட்டு மக்களுக்கு நல்வாழ்வு காட்டும் ஏடுகளாகும். "தமிழ்க்காதல்" என்றும் ஆய்வேடு சங்க இலக்கியம் பயில்வார்க்கும் ஆராய்ச்சித் துறையில் ஈடுபட முயல்வார்க்கும் விழுமிய கலங்கரை விளக்கம் ஆகும்.

ஓங்குபுகழ் ஆங்கிலத்தில் பேராசிரியர் மாணிக்கம் பெரும்புலமை நலம் வாய்ந்தவர் ஆவார். தமிழ் வினைச் சொற்கள் ஆய்வு, சங்க இலக்கியத்தில் காதற்கோட்பாடு தமிழியற் காட்சிகள் (A Study of Tamil Verbs, The Concept of love in Sangam Literature, A Glimpse of Tamilology) ஆகிய மூன்று நூல்களும் பேராசிரியரின் ஆங்கில மொழித் திறனுக்குச் சான்று கூறும்வகையில் வெளிவந்து ஒளிதந்து கொண்டிருக்கின்றன. ஆங்கில வார இதழ் (BLITZ) ஒன்றில் தமிழ் மொழியின் பெருமையினை நிலைநாட்டி அறிஞர் மாணிக்கம் எழுதிய விழுமிய எழுத்தோவியம் அவரது மொழிப் பற்றுக்கோர் எடுத்துக் காட்டு. நாட்டுத்தொண்டாக நல்கிய தலைவர்களுக்கு என்னும் நூலில் இருபானைந்து கடிதங்கள் வாயிலாகப் புதியதோர் கடித இலக்கியம் உருவாக்கியுள்ளார். பாரதநாட்டு

மொழிகள் பதினான்கும் நாடாளுமன்ற மொழியாகவும் பணித்தேர்வு மொழியாகவும் ஆகிட வலியுறுத்தியுள்ளார்.

இந்தியத் தமிழனாக மிளிரும் அறிஞர் மாணிக்கம் காரைக்குடி அகழப்பர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகவும் முதல்வராகவும் பணியாற்றியுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராகவும் இந்திய மொழிப் புல முதல்வராகவும் திகழ்ந்துள்ளார். மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் ஐந்தாவது துணை வேந்தராகத் திறமாகச் செயலாற்றியுள்ளார்.

மூதறிஞர் மாணிக்கத்தின் விழுமிய எழுத்தோவியங்கள் மணிவாசகர் பதிப்பகத்தின் வாயிலாகத் திருக்குறட் சுடர் தொல்காப்பியக் கடல், சங்க நெறி, இலக்கியச் சாறு, காப்பியப்பார்வை, தமிழ்க் கதிர் என ஆறு ஏடுகளாக, அழகுற வெளியிடப்பெற்றுள்ளன.

இந்தியப் பல்தமிழ்க் கழகத்தின் ஆட்சிக் குழுத் தலைவராகவும், இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் தலைவராகவும், காரைக்குடித் தமிழ்ச் சங்கத்தின் தலைவராகவும், தமிழகப் புலவர் குழுவின் தலைவராகவும், தமிழ்வழிக் கல்வி இயக்கத்தின் தலைவராகவும் வீற்றிருந்து விழுமிய தமிழ்த் தொண்டுகளை நிறைவேற்றியவர் மூதறிஞர் மாணிக்கம்.

சமயப்பணி போன்று மொழிப் பணியையும் எண்ணித் தமிழ் மக்கள் மொழியறமும் மொழிக்குக் கொடையும் செய்யப் பழகிக் கொள்ள வேண்டும்'' எனத் தூண்டிய துணைவேந்தர் மாணிக்கம், "குடியரசு நாட்டில் தமிழ்ப் பயிற்று மொழி வெற்றியடையத் திட்டமிட்டுச் செயலாற்றும் திறன் சான்ற தோன்றலாகத் திகழ்ந்தார். தில்லைத் திருக்கோவிலில் தேவாரம் திருவாசகம் ஓதித் தமிழ் வழிபாட்டினை நிலைநாட்டிய ஆற்றலும் ஏற்றமும் வாய்ந்த

வராக விளங்கினார். மாவட்டந்தோறும் தமிழ்வழிக் கல்வி தழைத்தோங்கிடத் தக்க வகையில் ஊர்வலமும் கருத்தரங்கும் நடத்தி மதுரை, சென்னை, நெல்லை, ஈரோடு, தில்லை ஆகிய இடங்களில் எழுச்சியுணர்வு ஊட்டி வந்தார்.

தமிழகத்தில் எத்துறையிலும் எவ்விடத்திலும் தமிழுக்கே முதலிடம் தர வேண்டும் என எடுத்தியம்பி வந்த மாணிக்கனார், "கடமையுடையார் கடைமை அடையார்:" என்று தெளிவுறுத்தியுள்ளார். "வெல்லத் தமிழினி வாகை சூடும்" என்று அறைகூவல் விடுத்துப் படிப்படியாகப் பைந்தமிழ்ப் பணியாற்ற மாவட்டந் தோறும் ஆயிரக்கணக்கில் அன்பர் பலரை அணிவகுத்திடச் செய்துவந்தார். எழுத்துச் சீர்திருத்தம் என்னும் பெயரால் தமிழின் இனிமையும் இயல்பும் எளிமையும் எழிலும் அழியாதவாறு காத்திடத் தொடர்ந்து விழிப்பாக வினையாற்றி வந்தார்.

தமிழ்ப் பேராசிரியர் ஒருவர் ஆராவமுதனைய தமிழுக்கு ஆற்ற வேண்டிய பணிகளையும் ஏற்க வேண்டிய பொறுப்புகளையும் சிறப்பாகவும் செம்மையாகவும் நிறைவேற்றிய மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் தமிழ்ப் பேராசிரிய மாமணியாக ஒளியுடன் மிளிர்கிறார். அவர் காட்டிய வழியில் மொழியினைப் பேணிப் போற்றிச் செயலாற்றுவது தமிழ் மக்கள் கடமையாகும்.

---

# மறைந்த மாணிக்கம்

சொ. சொ. மீ. சுந்தரம், எம்.காம்.,

தமிழ்த்தோட்டத்தில் இருந்த தென்னைமரம் சாய்ந்து விட்டதே என்று தமிழ் உலகம் வருந்திக் கொண்டிருக்கும் போது பக்கத்தில் இருந்த ஆலமரமும் திடீரென்று சாய்ந்து விட்டது. பிள்ளைத் தமிழ் வளர்த்த வள்ளியப்பா அவர்கள் மறைந்த செய்தி மனத்தை வருத்திக் கொண்டிருக்கும் போதே பெருந்தமிழ் வளர்த்த வ.சுப. மாணிக்கனார் அவர்கள் மறைந்து விட்டார்கள். ஆம். பொய்யிலாப் புலவர் ஆகப் பொன்னொளி விரித்த செம்மல் கையறு நிலையில் பாடக் கருப்பொருள் ஆகிவிட்டார். அண்ணாமலையில் பூத்து அழகப்பரிடம் காய்த்து மதுரையில் பழுத்த மாங்கனி பாண்டிச்சேரியில் உதிர்ந்து விட்டது.

தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் தேவையில்லை என்று முழங்கிய வாய், தமிழ்வழிக் கல்விக்காக ஊர்வலத்தில் நடந்து வந்த கால்கள், எங்கும் தமிழ் என்றும் தமிழ் என முழங்கிய நெஞ்சம், வள்ளுவத்தைத் தொட்டுத் தமிழ்க் காதல் கொண்டு மனைவியின் உரிமை படைத்த கரங்கள், போகும் இடமெல்லாம் தமிழன்பால் புத்தகம் சுமந்த தோள்கள், ஆகிய அனைத்தும் தனக்குவமை இல்லாதான் தாளில் அமைதி அடைந்துவிட்டன.

"எல்லோரும் தவம் செய்து பிள்ளைகளைப் பெறுவார்கள். நாங்கள் தவம் செய்து தந்தையாரைப் பெற்றோம்" என்று அவருடைய மக்கள் கதறியழுகிறார்கள்.

"அண்மையில் தானே அதிக நேரம் உரையாடினேன். அவரா மறைந்து விட்டார்?" என்று தமிழ்க்காதல் கொண்ட தமிழக முதல்வர் வருந்துகிறார்.

"இவரை வைத்த இடத்தில் இனி யாரை, வைத்துப் பார்ப்பது?" எனத் தமிழகப் பல்கலைக் கழகங்கள் வாடு கின்றன.

"தமிழுக்கு ஊன்றுகோலாக இருந்தவர் போய் விட்டாரே! தமிழ் வளர்ச்சிக்காகத் தன்னையே தந்து எதையும் துணிவோடு சொல்லும் இவருடைய மறைவி னால் வெண்ணெய் திரளும்போது தாழி உடைந்து விட்டதே" எனத் தமிழறிந்த பெருமக்கள் கண்ணீர் விடு கிறார்கள்.

தீயே! உனக்கொருநாள் தீமூட்டிப் பாரோமா
சாவே! உனக்கொருநாள் சாவுவந்து சேராதா
என்று கண்ணதாசன் மரபு கலங்கித் துடிக்கிறது.

சிலபேர் வாழ்வில்தான் புகழ் பெறுவார்கள்; பணி யாற்றச் சென்ற இடத்தில் இறந்துவிட்ட மாணிக்கனார் அவர்கள் சாவிலும் புகழ்பெற்றிருக்கிறார்.

தனித்தமிழ்ப் பல்கலைக் கழகம் செய்ய வேண்டிய பணிகளைத் தானே செய்து சரித்திரம் படைத்தவர் மாணிக்கனார்.

மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் உலகத் தமிழ்ப் பணியியல் துறையை உண்டாக்கி வெளிநாட்டுத் தமிழரைத் தமிழின்பால் ஆற்றுப் படுத்தினார். பட்டச் சான்றுகளில் தமிழ் இடம்பெறச் செய்தார். கல்விக்குழு, பேரவை ஆகியவற்றின் நிகழ்ச்சிகளைத் தமிழில் வெளியிட் டார்.சங்க இலக்கியத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க

அடிகோலினார்.பண்டித மணியின் நூற்களையும் பண்டித மணியைப் பற்றிய நூற்களையும் வெளியிட்டார். தொல் காப்பியத்தை ஆய்ந்து இன்றைய நிலைக்கேற்ப விரிவாகப் பதிப்பிக்கவும் உரையெழுதவும் வாழ்வின் இறுதிப் பகுதியைச் செலவிட்டார். ஆத்தி சூடி போலத் "தமிழ் சூடி" பாடினார். காரைக்குடித் தமிழ்ச் சங்கம் இந்தியப் பல் தமிழ்க் கழகம், தமிழகப் புலவர் குழு, ஆகியவற்றை வளர்த்தார்.மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையைக் காத்து தன் ஆசிரியருக்குக் கடனாற்றினார்.சங்க இலக்கியங்களை யும் கம்பராமாயணத்தையும் புதிய முறையில் விளக்கி னார். காரைக்குடி அழகப்பா கல்லூரியில் பணியாற்றிய போது கலைக்கழகம் அமைத்துப் பல மாணவர்களுக்குத் தமிழ் ஆர்வத்தை ஊட்டினார்.ஆசிரியரான 'பண்டிதமணி கதிரேசன் செட்டியார் நினைவாகக் காரைக்குடியில் உள்ள தன் இல்லத்திற்குக் 'கதிரகம்' என்று பெயரிட் டார்.

இறக்கும் பொழுது தன் பிள்ளைகள் நினைவுவந்து அவர்கள் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டால் அது ஆண்டவனை அழைத்ததாக இருக்கட்டும் என்று தம் பிள்ளைகளுக்குத் தொல்காப்பியன், பூங்குன்றன், பாரி என்று தமிழ்ப் பெயர் சூட்டினார். அவருடைய மறைவை நினைத்தால்,

சாவில் தமிழ்படித்துச்
சாக வேண்டும்-என்தன்
சாம்பல் தமிழ்மணந்து
வேக வேண்டும்

என்ற கவிதை வரிகள் இவருக்காகவே பாடப்பட்டன என்று எண்ணத் தோன்றுகிறது.

நான் அவருக்குக் கடன் பட்டவன். நான் பேசும் பேச்சு அவர் போட்ட பிச்சை. தமிழ் படிக்காமல், வணிகவியல் படித்த என்னை யழைத்து 1959 முதல் 1962 முடிய ஏறத்தாழ மூன்றாண்டுகள் உணவு இடைவேளையின் போது தமிழ் சொல்லிக் கொடுத்தவர் டாக்டர் வ.சுப. மாணிக்கனார். போட்டிகள் வைத்துப் பரிசுகள் கொடுத்தார். கண்டித்துத் திருத்தினார். கருணைக்கண் காட்டினார். தண்டமிழைத் தரமுணர்ந்து தாய் போல ஊட்டி விட்டார்.

அவருடைய மறைவு ஈடுகட்ட முடியாத பேரிழப்பு. மரணத்தைத் தவிர மருந்தில்லா நோய் எதுவுமில்லை என்று நாம் அறிவோம். இருந்தாலும் இந்த மரணம் தாங்க முடியாத துன்பமாகிவிட்டது.

தன்னை மறந்து தமிழ்வளர்த்த தாளாளன்
மன்னுபுகழ் வ.சுப. மாணிக்கம்—பொன்னனைய
உள்ளத்தால் பொய்யா துயர்ந்தோன் 'புகழ்காட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு.

என்று அந்த மேதை இருந்த காரைக்குடியை நோக்கி அஞ்சலி செய்வோம். தமிழ் வழிக் கல்வியைக் கொண்டு வந்து அவர் ஆன்மா இறைவன் திருவடியில் சாந்தியடைய உழைப்போம் என உறுதி எடுத்துக் கொள்வோம்.

---

## முனைவர் வெ.சு. அழகப்பன்

அழகப்பா பல்கலைக் கழகம், காரைக்குடி

வ.சுப. மாணிக்கனார் மறைவு தமிழ்நெஞ்சங்களைக் கலக்கும். அவர் உண்மையில் மாணிக்கம்தான். அவர் எந்நாளும் தமிழ்வளர்ச்சியை எண்ணினார். தமிழுக்குப்பின் மற்ற எதுவும் அவரை நினைக்க வைக்கும்.

தூய தமிழ்நடை-கவிதை-வேண்டும் என்பார். தமிழ் எழுத்தில்பிறகலப்போ எழுத்துச்சீர்திருத்தமோ அவர்விரும்பார். ஒலிப்பிழைகளைப் பொறுக்க மாட்டார். தொன்மை மரபுகளைக்காக்க வேண்டும்.அவை தெளிந்தமுடிவின என்பது கருத்து. தமிழர்-பிற கல்வி பெறினும் இளமையில் தமிழ்மொழி வழிக்கல்வியே அறிவைச்செழுமையாகவளர்க்கும் என்பார். சங்கத்தமிழே உண்மைத்தமிழ். பிற கலப்புத்தமிழ் என்பவர். தமிழ் வளர்த்த இடங்கள், தமிழறிஞர்கள்-கவிஞர்கள் இவரது செல்லப்பிள்ளைகள். இவற்றைப் புறக்கணிப்பார் யாராயினும் அவரை இவர் திரும்பியும் பாரார். இளம் பிள்ளைகள் திருக்குறள்-ஆத்திசூடி கொன்றைவேந்தன்'' படிக்கப் பரிசுகள் ஏற்படுத்தினார் சன்மார்க்கசபை-இராமசாமி தமிழ்க்கல்லூரி இவை வளர வாழ வகை செய்தார். இளைஞர் தமிழ் அறிவும் கவிவளமும் பெற அழகப்பா கல்லூரியில் கலைக்கழகம் கண்டார். மழலையருக்கு ஆங்கிலக்கல்வி ஊறுசெய்யும் என உணர்த்தி அதற்காகத் தெருத் தெருவாகச்சென்று குரல்கொடுத்தார்.

தமிழ் ஆய்வு நூல்கள் வெளிவர உதவினார். பல முனைவர்கள் பட்ட ஆய்வுகள் நடத்த வழிகாட்டினார். ஆராய்ச்சிகள் தமிழில் வளர அவாவினார். விஞ்ஞானத்

தமிழ் வளர வாய்ப்புக்கள்பல ஏற்படுத்தினார். தன்ஆசான் கதிரேசர் பால் ஆரா பக்தியுடையவர். திருக்குறள் அவருக்கு வாழ்வியல் நூல். திருவாசகம் அவரது பக்தி நூல். திருவாசகம் பொன்னம்பலத்தில் முழங்க வழி செய்தார்.

இவர்தம் வாழ்க்கை முழுவதும் தூய்மை - வாய்மை உடையவராக வாழ்ந்தார். இவரது ஒரு முக்கிய குணம் பிடிவாதம். பிடிவாதம் உடையவர்கள் தோல்வி அடைவர் எனக்கூறுவர். இவரோ வெற்றிதான் கண்டார். ஒருமுடிக் எடுத்தால் பின் யாருக்காகவும் எதற்காகவும் மாற்றிவு கொள்ளமாட்டார். ஆனால் எடுக்கும் முடிவை நிதான மாக ஆற அமர நினைத்துப் பொறுத்துத்தான் எடுப்பார்.

இவர் நல்ல கவிஞர் என்பதைப் பலர் அறியார். 'கொடை விளக்கு'' என்ற அழகப்பரைப் பற்றிய இவரது கவிதை நூல் இதற்கு நல்ல சான்று. இவரது தனிக்கவிதைகள்-வாழ்த்துக் கவிதைகள் படித்தால் என்றும் நம்மனத்தில் நிற்கும். ஆங்கிலத்திலும் இவர் எழுத, பேச வல்லவர். இவரது சொல்லாக்கம் புதுமையானது-பொலி வானது-தமிழுக்கு உரஞ்செய்ய வல்லது.

இவர் எங்களுக்கு நல்வழிகாட்டி. இவரை விரும்பி நாடி வருவாருக்கு இலக்கியச் சான்றுகள் காட்டி ஆறுதல் கூறி வழி காட்டுவார். நல்ல சிந்தனையாளர். செயல்வாதி. செஞ்ஞாயிறும் குளிர் நிலவும், பொதியமும் நிற்கும் வரை, ஒருதமிழன் உலகில் உள்ளவரை இவர் தொண்டும் இமயமாக நிமிர்ந்து நிற்கும்.

---

பேராசிரியர் தி.வை. மெய்கண்டார்,
மாநிலக்கல்லூரி, சென்னை.

மதுரைப் பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர், தமிழ்ப் பேரறிஞர் டாக்டர் வ. சு. ப. மாணிக்கம் அவர்கள் பாண்டியில் அரசினர் மாளிகையில் தங்கி இருந்த போது இம்மாதம் 25-4-89 அன்று இரவு 11 மணி அளவில் தம் 72ஆவது வயதில் மாரடைப்பால் மரணம் அடைந்தார் என்னும் செய்தியைக் கேட்டு அதிர்ச்சி அடைந்தோம் அவர் மரணம் அடைந்தபோது அருகில் யாருமே இல்லையாம். செய்தி அறிந்த புதுவை முதல்வர் பரூக் அவர்களும் புதுவைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர், கி. வேங்கடசுப்பிரமணியம் அவர்களும் நேரில் சென்று அஞ்சலி செலுத்தியுள்ளனர்.

மறைந்த பேராசிரியர் அவர்களுடன் 1980 ஆம் ஆண்டு மே மாதம் 30 ஆம் நாள், இலங்கைத் தமிழ்ப் பேரறிஞர் பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்களின் அழைப்பின் பேரில், திருக்குறள் மாநாட்டில் பங்கு பெற, இலங்கை செல்லும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. காலையில் 11 மணி அளவில், இராமேசுவரம் துறைமுகத்தில் கப்பல்மேல் தளத்தில் திருக்குறள் ஏடுகளைப் புரட்டியபடி எதிரே வந்த அவரைச் சந்தித்தேன். என்னைக் கண்டதும் அவர் மகிழ்ச்சி அடைந்தார். நான் வியப்புடன் "என்ன, மாநாட்டில் பேசுவதற்காகவா நீங்கள் திருக்குறளைப் படிக்கிறீர்கள்? நீங்கள் அறியாத குறளா?" என்றேன். அவர் மௌனமாகச் சிரித்தார். அவ்வளவு பெரிய பேரறிஞர் மறுநாள் நடைபெறவிருக்கும் மாநாட்டில் பேசப் போகிறோம்

என்னும் பொறுப்புணர்வுடன் திருக்குறளைக் கவனப் படுத்திக் கொண்டது கண்டு வியப்படைந்தேன்.

அவரிடம் மிகவும் நெருக்கமான தொடர்பு கொண் டிருந்த பேராசிரியர் டாக்டர் சாரங்கபாணியும் உடன் வந்திருந்தார். மூவரும் மாலுமியின் விருந்தினராகி, அவர் பக்கத்தில் அமர்ந்த வண்ணம் கடல் காட்சியைக் கண்ட படி பயணம் செய்தோம்.

அன்று மாலை மூவரும் இலங்கை மண்ணில், தலை மன்னாரில் இறங்கிப் பொருள்களைப் பாதுகாப்பாக வைத்துவிட்டு கடற்கரை ஓரமாக நடந்து சென்றோம். பின்னர் ஓரிடத்தில் அமர்ந்து முகம் தெரியாத இருட்டில் பேசிக் கொண்டிருந்தோம்.

மறுநாள் தமிழ்நாட்டில் பொதுத் தேர்தல் நடை பெறவிருந்தது. எங்கள் பேச்சு தேர்தலைப் பற்றி அமைந் தது. அரசியல் சூழ்நிலை தி. மு. க. வுக்கு எதிராக இருப் பதைப் பற்றிப் பேசினோம்.

டாக்டர் வ. சு. ப. மாணிக்கம் கலைஞர் ஆட்சிக்கு வரவேண்டுமே, என்ற பெருங்கவலையோடும், துடிப் போடும் பேசியது இன்றைக்கும் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இந்த உணர்வு அவருக்கு எல்லாக் காலத்திலும் இருந்து வந்தது.

டாக்டர் கலைஞரும், பேராசிரியர் அன்பழகனும் நாவலர் நெடுஞ்செழியனும் சேர, சோழ, பாண்டியர்களைப் போல மூவராக விளங்கி ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்று அவர் விரும்பினார். இந்தக் கருத்தை அவர் பிற் காலத்தில் பொது மேடைகளிலும் வெளிப்படுத்தினார்.

மூன்று நாள் மாநாட்டில் கலந்து கொள்ள இலங்கை வேலணைக்கு வந்த அவர் தம் மகளின் மகப்பேறு காரண

மாக ஒருநாள் முன்னதாகவே தாயகம் திரும்பினார். ஈழத்தில் தங்கி இருந்தபோது ஈழத் தமிழ்ப் பேரறிஞர் தனி நாயக அடிகளார் அவரை வந்து பார்த்துப் பேசி மகிழ்ந்தார். தமிழகத் தேர்தல் முடிவுகள் அவர் விருப்பத்திற்கு எதிராகவே அமைந்தன.

1975-இல் மயிலை இலக்கிய வட்டத்தின் சார்பில் சிலம்புச் செல்வர் சிலப்பதிகாரத்தொடர் சொற்பொழிவுகளை நிகழ்த்தியபோது என் அழைப்பின் பேரில் நிறைவுச் சொற்பொழிவுக்குத் தலைமை ஏற்றுச் சிறப்பித்தார். சிலம்புச் செல்வரிடம் உயர்ந்த மதிப்பினைக் கொண்டிருந்தார். சிலம்புச் செல்வருக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கிய போது, மதுரைத் துணைவேந்தராக விளங்கிய அவர் மகிழ்ச்சி தெரிவித்து எனக்குக் கடிதம் எழுதி இருந்தார். பெரியவருக்கு அவர் வணக்கத்தை தெரிவித்த விதம் இளைஞர்கள் பின்பற்ற வேண்டிய ஒன்றாகும்.

இளந்தமிழன் இதழைப் பற்றிப் பாராட்டுரைகள் வழங்கினார். கூடுதலாகத் தேவை என்றும் அவ்வப்போது கடிதங்கள் எழுதிப் பெற்றார். மறைவதற்குச் சிலநாட்களுக்கு முன் தம் அறிக்கையை இளந்தமிழன் இதழுக்கு அனுப்பி வெளியிடும் படி கடிதமும் எழுதி இருந்தார் அறிக்கை வெளிவர வேண்டிய பக்கங்களில் இரங்கல்செய்தி. எழுத நேர்ந்து விட்டது துயரத்தைத் தருகிறது.

ஆளாளுக்குச் செய்யும் எழுத்துச் சீர்திருத்தம் தாய் மொழியை எங்கேயோ கொண்டு போய் நிறுத்திவிடும் என்று அவர் அஞ்சினார்.

தமிழ்மொழி தமிழ்நாட்டில் எல்லாத் துறையிலும் ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்பதற்கு உறுதியுடன்

தமிழ் வழிக் கல்வி இயக்கத்தை உருவாக்கி வரும் நிலையில் அவர்மறைந்தது தமிழ் மொழிக்கு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாக அமைந்துவிட்டது. இந்த இயக்கத்தில் சாதி, சமய,கட்சி வேறுபாடின்றி அனைவரும் ஈடுபட வேண்டும் என அவர் விரும்பினார்.

அவரால் எழுச்சியூட்டப் பெற்றவர்களாகிய நாம் அந்தப் பணியை நிறைவு செய்வதே அவருக்குச் செலுத்துகிற அஞ்சலியாக அமையும்.

அவர் மறைந்த உடனேயே தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர், கல்வி அமைச்சர் பேராசிரியர் அன்பழகன், முன்னாள் அமைச்சர் இராம. வீரப்பன், சிலம்புச் செல்வர் ம.பொ. சிவஞானம் முதலியோர் இரங்கல் செய்திகளைத்,தெரிவித்துள்ளனர். தமிழகத் தலைவர்கள் அவரிடம் கொண்டிருந்த மரியாதையையும், அன்பையும் அவர்கள் அறிக்கைகள் மூலம் அறியலாம்.

வாழ்க டாக்டர் வ. சு. ப மாணிக்கம் அவர்கள் திருப்புகழ்!

– இளந்தமிழன், மே, 89

---

முது முனைவர் வ.அய். சுப்பிரமணியன்
முன்னாள் துணைவேந்தர், தமிழ்ப்பல்கலைக் கழகம்

ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளாகத் தமிழ்ப்படிப்பு வட்டத்தில் முதல் நிலைக் கருத்தாளராக மாணிக்கனார் இருந்தார். இவர் ஆய்வுட் பயிற்சி தன் முயற்சியால் பெற்றது. தமிழ் ஆசிரியர்கள் பின்னிற்பதை விரும்பாதவர். எதிலும் முன்னிற்க வேண்டும் என்று விரும்பினார். தானே எடுத்துக்காட்டாக இருக்கவும் முயன்றார்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1943 முதல் மூன்றாண்டு தமிழ்ச்சிறப்பு வகுப்பில் நான் படித்த போது அவர்களை அறிய நேர்ந்தது. அறிவியலும் தர்க்கமும் இடை நிலை வகுப்பில் பயின்று தேச எழுச்சியால் தமிழ் படிக்க மூன்று நான்கு பேர் நாஞ்சில் நாட்டுப் பகுதியிருந்து அண்ணாமலைக்குச் சென்றோம். இடம்கிடைக்குமா என்று அஞ்சிய நாங்கள் தமிழ்ச் சிறப்பு வகுப்பில் மிகக் குறைவாகவே விண்ணப்பம் பெற்றிருந்ததால் தடையேதும் இன்றிச் சேர்ந்தோம். ஆசிரியர்களும் மாணாக்கர்களும் நெருங்கிப் பழகவும் விரும்பவும் வெறுக்கவும் வாய்ப்பு பல கிடைத்தது. ஒருசிலர் வ.சுப.வை மிகவும் விரும்பினர். அதில் நானும் ஒருவன். அந்தவிருப்பம் ஆயுள் முழுவதும் நிலைத்தது.

சிறப்பு வகுப்பில் வ.சுப. சிறுபாணாற்றுப்படை எடுத்தார். செய்திச் செறிவு இருந்தது. ஆனால் பாடம் கவரத்தக்க நிலையில் அமையவில்லை. அறையில் முன்கூட்டியே பாடத்தைப் படித்து விட்டு வகுப்பிற்கு வருவதால் கேள்விகள்தான் கூடுதலாக இருக்கும். மிகவும் இனிமையா

கப் பதில் கூறியவர் ஆசிரியர் பூவராகனார். அதன் கருத்து எவ்விதக் கோப தாபம் இல்லாமல் பதிலளிப்பவர் வ.சுப. அப்போது தொடங்கித் தமிழ் இலக்கியப் பெருமை அதன் சிறப்பு முதலியவற்றைப் பற்றித்தான் பேசுவார். தக்க தெளிவுகளுடனும் பிற மொழி ஒப்புமையுடனும் தமி ழுக்கு ஏற்றம் கூறினால், என்போன்றோர் வரவேற்ற னர். இல்லையெனில் வரவேற்காது அகன்று நின்றனர். வ.சுப.வின் ஆழ்ந்த பயிற்சியும் நேர்மையும் பற்றற்ற நிலையும் மாணவர்களால் பாராட்டப் பட்டன.

எம். ஒ.எல், முனைவர் பட்ட அறிக்கை முதலியவற் றைத் தாமே பயின்று தனியாகத்தான் எழுதித் தேர்ந் தார். முனைவர் பட்ட அறிக்கை ஆங்கிலத்திலும் தமிழி லும் பின்னர் சைவசித்தாந்தக் கழகம் வெளியிட்டது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அப்போது ஊதிய உயர்வும் பதவி உயர்வும் பெறுவது அரிது. எனவே காரைக்குடி அழகப்பாக்கல்லூரி தலைமைப் பேராசிரிய ராகச் சென்றார். பின்னர்கல்லூரித்தலைவரானார்.அந்தப் பதவியைக்கொள்கை காரணமாகத் துறந்தபோது மீண்டும் அண்ணாமலையில் தமிழ்த்துறைத் தலைவராகப் பதவி யேற்று அறுபதாவது வயதில் பதவி விலகினார். சிறந்த இலக்கண இலக்கியக் கட்டுரைகள் அப்போது வெளியா யின. மேடைப் பேச்சும் எளிமையாக நகைச்சுவையுடன் அமைந்திருந்தது.

திராவிட மொழியியற் கழகம் உயர் தகைமை ஒன்றை 19ஆம் ஆண்டு தொல்காப்பிய ஆய்விற்கு வழங்கியது. சில மாதங்களுக்குள் மதுரைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் பதவியைப் பெற்றார் எனவே விதி விலக்காக மொழியியற் கழகம் அனுமதியளித்தது. துணைவேந்தர் பதவியை 1983

இல் ஒன்றிரண்டு மாதம் முன்பே விலகியதால் மீண்டும் மொழியியற் புலம் தனதுதகைமையை வழங்கியது. தமிழ்ப் பல்கலைக்கழகம் தொல்காப்பியப் படிப்புச் சிறக்க உயர் தகைமை யொன்றை இரண்டு ஆண்டுகளுக்கு அவருக்கு வழங்கியது.

27.4. 89 ஆம் நாள் காலையில் மொழியியற் கழகச் செயலாளர் வ.சுப. காலமான செய்தி இந்து ஆங்கில இதழில் வந்துள்ளதைக் கூறினர். நம்பவில்லை. நான் காணவேண்டும் என்று கூறி அவரை அனுப்பிய பின்னர், பிற்பகல் திரு தொல்காப்பியரின் தந்தி எங்கெங்கோ சென்று 25.4.87 அன்று பூத உடல் அடக்கச் செய்தி தாங்கி வந்து சேர்ந்தது.

தமிழ் இலக்கிய இலக்கண விளக்கத்தில் தனித்துவம் ஒன்றை நிலைநாட்டியவர் வ.சுப.

---

# கையறு நிலை

## துன்பமாலை

குறளியம்–திங்களிதழ்–ஈரோடு

தி.பி.12–4–2020 செவ்வாய் காலை (25-4-89) வழக்கம் போல் வானொலி கேட்குங்கால் மாநிலச் செய்தியில் வந்தது செந்தீ! செவிவழி புக்க அது செவியையும் சிந்தையையும் ஒருசேரச் சுட்டது! புதுவைப் பல்கலைக் கழகத்திற்குப் போந்த மூதறிஞர் செம்மல், ‘முனைவர் வ. சுப. மாணிக்கனார்’ அமரரானார் என்ற அஃது அகமும் முகமும் அழுங்க அலறியது. “ஆங்கிலமே வெளியேறு! அன்னைத்தமிழே வேலை பெறு!” என்ற முழக்கத்தை இனிக்கேட்க இயலாதே எனவும், திருக்குறள் வழி அமைய இருக்கும் சமுதாயமான குறளாயத்தார், ‘திருக்குறள் நம் மறை’ என்று கூறுவது, ‘நம்மாழ்வார்’ ‘நம் பிள்ளை’, ‘நஞ்சியர்’ என்பவை போன்றதோர் வழக்கென்றும் வலிவு வழங்கிய குரல் இனி ஒலிக்காதே என்றும் உள்ளம் மறுகிக் கவன்றது. உடனே ஓர் பொன்னாடையுடன் காரைக்குடி நோக்கி வழிக்கொண்டோம். பாவலர் திரு. ‘ஈவப்பனார்’ 3-4-2020 ஞாயிறு (16–4–89) காலை முதல் மாலை வரை திருச்சி தமிழகப் புலவர் குழுக் கூட்டத்திற் கண்டு கலந்துரையாடியக்கால், கோவை நகரத்தில் தமிழ்வழிக் கல்வி இயக்கத்தைச் சிறப்பாகவும் எடுப்பாகவும் அமைக்கத்தக்க முயல்வுகளைச் செய்யுமாறு கூறிய அறிவுரையும், செவியுரையும் சிந்தை நிரம்பப்

பெற்ற 'ஈவப்பனார்' வானொலிச் செய்தி வேள்எவ்வி மறைவுபற்றி வெள்ளெருக்கிலையார்பாடிய இரங்கலுரையான 'பொய்யாகியரோ'எனப் பூசல் புரிந்து வழிகொண்டார். பிற்பகல் 3-45 மணிக்குப் புதுக்கோட்டைபுக்க பின்னர் மாலை ஏடுகளில் மறைவுச்செய்தி வந்திருக்கக் கண்டு மனத்துயர் மிக்கோம். மாலை 6-30மணிக்குக் காரைக்குடிக் கதிரகத்துள் தமிழ்க்கென உழைத்த தகை சான்ற பருவுடல் அமைதியாகப் பெருந்துயிலில் இருப்பக்கண்டு நெஞ்சு கொள்ளாத விம்மலுடன் கண்ணீர் பெருக்கி நின்றோம். மக்களும் அவர்தம் உடன் பிறந்தார்களும் அருகில் வந்து மனம் மறுகினார்கள்.அழகப்பா பல்கலைக் கழகக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் திரு. 'செல்வக்கணபதி' முனைவர்கள் திரு. அ. விசுவநாதன், திரு. ஞான சேகரன்'பாவலர் மணி திரு. 'ஆ. பழனி' முனைவர் பயிற்சியிலிருந்த முதுகலைஞர் பலரும் சூழவிருந்தனர்.

நெடுந்துயிலிலிருந்த மூதறிஞர் தலைமாட்டிற் பல கணிப் பாங்கர் இருந்து பட்டுக்கோட்டைப் புலவர் 'தங்கவேலனாரும்' தமிழகப் புலவர் குழு உறுப்பினரான பாவலர் சித்தோடு 'ஈவப்பனாரும்' குறளாயமுறை வழுவாமல் 'திருக்குறள் முற்றோதல்' செய்தனர். பிற்பகல் 3-15 மணிக்கு மதுரை திரு.பி.டி.'ஆர். பழனிவேல்ராசன் அவர்கள் தலைமையில் இரங்கல் கூட்டம் நடந்தது. மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் துணை வேந்தர் முனைவர் 'திரு. இலட்சுமணன்' அவர்களும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் முனைவர் 'திரு. ச. அகத்தியலிங்கனாரும், காரைக்குடி அழப்பா பல்கலைக் கழகத் துணை வேந்தர் திருமதி. 'இராதா தியாகராசன் அவர்களும்,திருப்பத்தூர்த் தொகுதிச் சட்டமன்ற உறுப்பினர் திரு. 'தென்னரசு அவர்களும் காரைக்குடி உறுப்பினர் திரு.இராம. நாரயணன் அவர்களும்,

அண்ணாமலைப் பல்கலைக் கழகக் சார்பில் முனை வர் திரு. 'ஆறு அழகப்பனாரும்' புலவர்கள் சார் பில் இலக்கியச் செம்மல் திரு. புலவர் 'இளங்குமர னாரும்' குடும்பத்தாருள் 'மா பூங்குன்றனும்,' நெஞ்சம் பிளக்கும் இரங்கலுரை மொழிந்தனர். 'திரு. செல்வக் கணபதி' சிவபுராணம் முற்றும் ஓதி இரங்கல் மொழிந் தார். குறளாயச் சார்பில் 'ஈவப்பனாரும், தங்கவேலனா ரும் மூதறிஞர் உடலில் பொன்னாடை போர்த்தினர். 4-30 மணிக்கு ஊர்வலம் புறப்பட்டது பசும்பொன் முத்துரா மலிங்கர் மாவட்ட ஆட்சித்தலைவர் 'திரு.பழமலை அவர் களும், முனைவர்கள் திருவாளர்கள் 'இரா சாரங்கபாணி, 'அ' விசுவநாதன், சிவகுருநாதன், மு. அப்துல் கறீம், ஞான சேகரன் தமிழண்ணல், சி. நயினார் முகம்மது. சுப. அண்ணாமலை, 'பா. நமசிவாயம், சவகர்லால், கதிரேசன் மணிவாசகர் பதிப்பக உரிமையாளர் 'திரு ச. மெய்யப்பர் பாவலர் 'திரு. சொ. சொ. மீ. சுந்தரம், முடியரசன், 'ஆ' பழனி ஆகிய அறிஞர் பெருமக்கள் கண்ணீர் சொரி யச் சூழவந்தனர். மதுரைப் பல்கலைக் கழகத்திலிருந்து இரு பேருந்துகள் நிறைய வந்த பேராசிரியர்களும் பணி யாளர்களும் வந்தார்கள். மாலை 5 மணிக்குச் செந்தமிழ் மாணிக்கச் செழும் பழம் செந்தீ மூழ்கியது.

குறளியம், மே. 1989

---

# கையறு நிலைப்பாடல்கள்

### கவியரசு முடியரசன்

போதும் எனுமனம் பூத்த நெஞ்சினன்,
யாதும் அவாவிலன், யாமையென் றடங்கியோன்,
பயனில சொல்லாப் பாவலன், என்றும்
நயனுள மொழியும் நாவலன், என்பால்

ஈடிலா அன்பன், எளியன், இனியன்,
கேடிலா மனத்தன், கிளர்ச்சித் தலைவன்,
எங்கள் சங்கப் புலவன் இவனெனப்
பொங்கும் உணர்வாற் பொலிந்த பெற்றியன்,
பெருக்கிய புகழ்நிலை பேணிவந் துறினும்

செருக்கே அறியாச் சீர்மை யாளன்,
அருமை! அருமை! என் றான்றோர் போற்றும்
பெருமிதங் குன்றாப் பேரறி வாளன்,
தொல்காப் பியநூல் துருவித் துருவிப்
பல்கால் ஓதிப் பாங்குற மொழிந்தவன்,

உள்ளந் தெளிவுற உலகம் மகிழ்வுற
வள்ளுவந் தந்த மாமணி, நாளும்
சிந்தனைப் புதுமையைச் செவ்விதிற் காட்டும்
செந்தமிழ் நடையிற் சிரியன், கூரியன்,
ஆள்வோ ராகினும் அவர்க்கும் அறிவுரை

கேள்போல் நின்று கிளத்தும் துணிவன்,
ஆசாற் றொழுதெழும் அரும்பெறல் மாணவன்,
பேசான் பழிமொழி, ஏசான் பிறரை,
நண்பன், பண்பன், நயத்தகு தமிழைக்
கண்ணென உயிரெனக் கருதும் இயல்பினன்,

கல்வியைத் தமிழிற் கற்கத் தடையெனில்
அல்வினை யதுதான் அழிகவென் றெழுந்து
வல்வில் லம்பெனச் சொல்லமர் தொடுத்தனன்,
அமர்க்களம் சென்றவன் ஆங்கே மாண்டனன்,
எமர்க்கெலாம் துயரே ஏற்றினன்,ஐயஓ!

யாவன் அவனென வினவின், தீவினை
செய்யாச் செம்மல் செந்தமிழ்ப் பெம்மான்
பொய்யா மாணிக்கப் புலவன் அவனே.

---

முனைவர் சோ.கந்தசாமி
தலைவர், இலக்கியத்துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம்

சான்றாண்மை போற்றும் தமிழ்ப்பெரும! கற்றோருள்
தோன்றாண்மை மிக்க சுடர்ப்பரிதி! கொள்கையினில்
எள்ளளவும் மாறாத ஏந்தலே! எந்தமிழ்தான்
உள்ளளவும் வாழும் உரம்மிக்க பேராசான்!
மக்கட் பெயரெல்லாம் மாத்தமிழின் நற்பெயராய்
ஒக்கவைத்த பற்றாள! உண்மைத் தமிழ்த்தொண்ட!
கல்லா இனம்எல்லாம் கற்கவைத்த வேள்என்றே
எல்லோரும் ஏத்தஎழில் அண்ணா மலைமன்னைச்
சொல்லெடுத்துப் பாடிய தூயோனே! நின்னிடத்தில்
ஒல்லும் வகையால் உணர்வுபெற்ற மாணாக்கர்
வெல்லும் வகையால் வினைபுரிந்த ஆசான்மார்
பல்லோரும் போற்றப் பணிபுரிந்த மூதறிஞ!
மாணிக்க மாமலையே! மாட்சியுறும் ஆராய்ச்சி
பேணிப் பலபனுவல் பைந்தமிழ்த்தாய் ஏற்றிடவே
காணிக்கை வைத்த கவினார் தமிழ்க்களிறே!
ஆணிப்பொன் ஒத்த அருந்தமிழ்க்கு இன்னலெனின்

ஓடிப்போய் முன்நின்றே உண்மைக் குரல்கொடுக்கும்
பாடி மறவனே! பால்போல் மனத்தோனே!
தன்மானம் ஓங்கத் தமிழ்ப்புலவன் வாழ்வதற்கு
முன்மானம் காத்த முதல்வனே! நற்சிறாஅர்
தாய்தமிழே வாயிலாய்த் தாழ்விலாக் கல்விபெற
வாய்மை இயக்கம் வளர்த்த தமிழ்மகனே!
உள்ளுதொறும் உள்ளுதொறும் ஓங்கும் உணர்வளிக்கும்
வள்ளுவரும் கம்பரும் வளர்தமிழ்க் காதலுமே
ஆய்வுநெறிக்(கு) ஆணியாய் ஆன்றோர்க்(கு) அருவிருந்தாய்
தேய்வறியாச் செல்வங்கள் செந்தமிழ்க்குத் தந்தவனே!
எண்மையனே! திண்மையனே! எண்ணம் சிறந்தவனே!
'அண்ணா மலையில் அடிவைத்தற்(கு) அஞ்சியே
கண்ணார் கதிரேச மாமணியைக் காலன்தான்
அண்டர் உலகுய்த்த அற்புதத்தைக் கம்பனின்
பண்கொண்டு போற்றுவோய்! பார்க்கில் அதுநெறியாய்
விண்கொண்டு சென்றானோ வீரமிலாக் காலனுமே!
மீண்டுமொரு சங்கப் புலவனை மேதையினை
யாண்டுபோய்க் காண்போம் இனி.

---

புலவர். இரா. இளங்குமரன்

மாணிக்கச் செல்வ மணித்தமிழ் அன்னைக்குக்
காணிக்கை யாய் வாய்த்த கண்ணாள - பேணிக்கை
வைத்த துறையெல்லாம் வாய்ந்த துறையாக்கி
வைத்தநீ எங்களின் வைப்பு.

---

புலவர் ஆ. பழநி,
காரைக்குடி

1. ஏணிக்கண் ஏறி இனிஉய் வேம் என்னுகையில்
மாணிக்கம் வீழ்ந்த சொல் மருமத்தே பாய்ந்ததடா!
மாணிக்கம் வீழ்ந்தான் என்னுஞ்சொல் மாற்றலரைத்
தேனிக்க வைத்திடுமோ? தியாகப் பற்றுதடா!

2. எல்லையிலே தமிழ்வந்தால் இறைநோகும் என்றலறித்
தில்லையிலே தீட்சிதர்கள் செய்தசெயல் புறங்கண்டாய்
தில்லையிலே தீட்சிதர்கள் செய்த செயல் புறங்கண்
டோய்
ஒல்லையிலே கூற்றுவனைப் புறங்காண ஒட்டலையோ!

3. உள்ளு தோறும் உள்ளுதோறும் உணர்வூறிச் செய
லோங்க
வள்ளுவரைச் சொன்னவாய் வளரெரிவாய்ப் பட்ட
தடா!
வள்ளுவரைச் சொல்வாய்மேல் வளரெரிக்குக் காத
லென்ன
தெள்ளுதமிழ்ச் சுவடிகளின் சுவைகண்ட தியன்றே?

4. பள்ளிச் சிறுவருக்குத் தாய்மொழிப் பாலருத்தார்
கள்ளிப்பால் ஊற்றும் கயமையைக் காய்ந்தனையே!
கள்ளிப்பால் ஊற்றும் கயமையைக் காயுமுனம்
கொள்ளிவாய்ப் பட்டனையே! குறைமுடிக்க யாருள்
ளார்?

5. எங்கள் மறைகுறளே என்னுமொரு குமுகாயம்
தங்கிச் செழிக்கத் தவறாதே தொண்டுசெய்தாய்!
தங்கிச் செழிக்கத் தவறாத அத்தொண்டின்
பொங்கல் பொங்குகையில் எங்கேநீ போய்விட்டாய்!

6. துஞ்சிக் கிடந்த மாணிக்க மேநின்னைப்
பஞ்சிபோ லேயெரித்த நெருப்பும்பின் பாறியதே!
பஞ்சிபோ லேயெரித்துப் பாறினும் உன்நினைவெம்
நெஞ்சை எரிக்கும் நெருப் பென்றும் அவியாதே!

7. கண்டுகண்டு கற்பிக்கும் கதிரனைய பெரும்புலவர்
பண்டித மணியார்பால் பயின்றறிவு சான்றனையே!
பண்டித மணியார் பால் பயின்றதன்பின் வந்தஐயம்
விண்டுரைத்துத் தெளிவுபெற வியனாடு புக்கனை
யோ!

8. கலைவன்மை காட்டும் கவினூலும் பேனாவும்
தலைவன் வருகைக் கெதிர்நோக்கித் தவமிருக்கும்!
தலைவன் வருகைக்குத் தவமிருக்கு மாயினெங்கள்
நிலையென்ன? துடிப்பென்ன? நீயறிய மாட்டாயா!

9. எல்லாம் தமிழாகி இயங்குநாள் வருதற்கு!
வல்லாய் நீ செய்த வகைமையை நானறிவேன்
வல்லாய் நீ செய்த வகைமை கனிகையில் நீ
இல்லாமை எங்கள் இதயத்தை அறுக்கிறதே!

10. ஆற்றுவா ரில்லை; அழுதகண் ணீர்துடைத்துத்
தேற்றுவா ரில்லை; தெளிவு வரவில்லை!
தேற்றுவா ரில்லையென்ற தெளிவு பிறந்தபினும்
ஊற்றுவாய் மூடாமல் கண்ணீர் ஒழுகுதையா!

---

முனைவர் பழ. முத்துவீரப்பன்
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

கடல்போல ஆழ்ந்தகன்ற கல்வியாளர்!
கதிர்மணிக்குப் புகழ்மிகுத்த தலைமாணாக்கர்!
கொடை அண்ணா மலைவள்ளல் அழகப்பர்பல்
கலைக்கழகம் மொழிவளர்த்த தமிழ்ப்பேராசான்
படிப்படியாய் முன்னேறித் துணைவேந்தானார்!
பைந்தமிழர் உலகத்தின் தனிவேந்தானார்!
மடிந்தாராம் மாணிக்கம்! ஐயோ! இல்லை!
முதறிஞர் பயன்றமிழாய் வாழ்கின்றாரே!

உள்ளம்போல் வெள்ளையுடை உடம்பிருக்கும்!
ஒப்பில்லாச் சுறுசுறுப்போ உடனிருக்கும்!
பிள்ளைபோல் குறுஞ்சிரிப்பு இதழிருக்கும்!
பெயர்த்துவைக்கும் அடியெல்லாம் தமிழிருக்கும்!
வெள்ளம்போல் கருத்துமழை நாவிருக்கும்
வேந்தரையும் நெறிப்படுத்தும் துணிவிருக்கும்!
வள்ளலெங்கள் மாணிக்கம் மாண்டாராமே!
மாமனிதர் பண்புகளால் ஒளிர்கின்றாரே!

தணியாத "தமிழ்க்காதல்" கொண்டிருந்தார்!
தன்னிகரில் வள்ளுவத்தைப் படைத்து நின்றார்!
அணிசிறந்த கம்பனையும் அளந்தார்! வென்றார்!
அன்னைக்குத் துறைதோறும் புதுமை கண்டார்!
பணியாது தமிழ்க்கென்று துடித்தார்! யார்க்கும்
பணியாது மொழிவளர்த்தார்! பயன்நூல் தந்தார்!
இணையில்லா மாணிக்கம் இறந்தாராமே!
எழுத்தாளர் சிந்தனையால் இருக்கின்றாரே!

தமிழகத்தின் புலவர்குழுத் தலைவர் என்பார்!
தமிழ்ச்சங்க அமைப்பிற்கும் தலைவர் என்பார்!
தமிழ்பரப்பும் 'ஆசிரியர் மன்றம்' போற்றும்
தனித்தலைவர் பணித்தலைவர் இவரே என்பார்!
தமிழ்வளர்க்கும் குழுவிலெல்லாம் தலைமைபெற்றார்!
சான்றாண்மைத் தகுதியினால் மதிப்புப் பெற்றார்!
தமிழ்ப்பெரியோர் மாணிக்கம் வீழ்ந்தாராமே!
தமிழ்ச்செம்மல்தொண்டுகளால்தழைக்கின்றாரே!

வளர்மேலைச் சிவபுரிக்குப் பெருமை தந்தார்!
வாழ்காரைக்குடி நகர்க்குச் சிறப்புத் தந்தார்!
வளர்புதுவை நகரத்தில் பணிமுடித்தார்!
வாழ்வாங்கு வாழ்ந்து தமிழ் வரலாறானார்!
இளங்கதிர்போல் வ.சுப.மா. இயங்கி வந்தார்
ஈட்டுபுகழ்ப் பெருமைநலம் குலத்திற் கீந்தார்!
ஒளிசிந்தும் மாணிக்கம் ஒய்ந்தாராமே!
ஓவியத்தார் புகழுடம்பிற் பொலிகின்றாரே!

## சொ. சொ. மீ. சுந்தரம்

தனவணிகர் திருமரபில் தோன்றித் தெய்வத்
 தமிழ்வழியில் கல்விக்குப் பாடுபட்டு
மனத்தாலும் அறிவாலும் உயர்ந்து நின்ற
 மணிகொடுத்த மாணிக்கம் நம்மை விட்டுத்
தனக்குவமை இல்லாதான் தாளைச் சேர்ந்தார்.
 சங்கத்தில் அவர் மறைவுக்கு இரங்கற் கூட்டம்;
அனைவருமே ஒன்றாகத் திரண்டு வாரீர்!
 அஞ்சலிப்போம், அவர் வழியில் தமிழைக் காப்
 போம்.

---

## பேராசிரியர் தெ. முருகசாமி

முதல்வர், இராமசாமி தமிழ்க்கல்லூரி காரைக்குடி

வண்டமிழ் சுப.மா. என்று
 வாயாரப் புகழும் நல்ல
தண்டமிழ் வாணர்க் கெல்லாம்
 தாம்வரம் பாகி நின்று
மண்டிணி ஞாலந் தன்னுள்
 மாண்புறுதொல் காப்பி யர்போல்
எண்டிசைப் புகழைக் கொண்ட
 ஏறார்வ. சுப.மா. வாழ்க!

---

## புலவர் பொதிகைச் செல்வன்

சங்கநூல் மாட்சிகளைத் தனித்தபெருங்
காட்சிகளாய்த் தந்தே நாளும்
எங்களகம் கவர்ந்துநின்ற ஈடற்ற
மாணிக்க ஏந்தல், இந்நாள்
இங்கவனின் உயிர்நிகர்செந் தமிழ்விடுத்தும்
எமைவிடுத்தும் எங்குச் சென்றான்!
பொங்குதுயர்த் தீயினில் எம்சிந்தைமிக
வெந்துருகிப் போன தந்தோ!

செந்தமிழின் இருகண்ணாய்த் திகழும்தொல்
காப்பியம்,நல் திருக்கு றட்கு
விந்தைமிகும் விளக்கங்கள் தந்தபெரும்
பேராசான், விரிநி லத்தோர்
சிந்தைகவர் 'தமிழ்க்காதல்' தந்திட்ட
மூதறிஞர் செம்மல், துன்பச்
செந்தீயில் எமைவீழ்த்திச் சென்றனனே!
இனியெங்குச் சென்று காண்போம்?

---

## சுப. கதிரேசன் எம். ஏ.

ஆத்தாளாம் தெய்வானை அகநா னூறும்
அப்பச்சி மணிச்செட்டி புறநா னூறும்
கூதலுக்கு ஒன்றையிலே பிறந்த இன்பக்
குறுந்தொகையே மாணிக்கம் கொற்கை முத்து
நாதமெழும் பண்டிதநல் மணிக்கு வாய்த்த
நாக்கேதான் வ. சுப; சங்ககாலச்
சீதனமாம் தொகை நூலை ஆய்ந்த மேதை
சிபார்சென்றால் சுட்டெரிக்கும் ஆண்பால் சீதை.

வந்திருந்தால் விடுமுறையில் சிப்பா வேட்டி
வழிநடைப்பேச் சுக்குச்சா ரங்கபாணி
சந்தியில் நாம் பார்த்தாலோ புன்ன கைப்பார்
சரளமாய்ப் பேசிவிட்டால் காசா கேட்போம்
சொந்தத்தில் மகிழ்வுந்தா? வாங்க வேண்டாம்
சுடுகின்ற காலுக்குச் செருப்பு வேண்டாம்
தொந்தரவாய்க் கருதுகிறார்; இவர்தான் எங்கள்
துணைவேந்தர்; காந்திக்கு மறுவாழ்வில்லம்

கல்வெட்டு மனிதரென்பார்; ஒப்பமாட்டேன்
கல்லெழுத்து வளைந்திருக்கும்; வளையமாட்டார்
பல்செட்டு அறுபதிலும் குலையவில்லை,
பண்பாட்டில் இராமபிரான் வீட்டுமுல்லை
இல்லார்க்கும் உள்ளார்க்கும் ஒன்றேநீதி
இவருக்கு இவர்நெஞ்சே பிரதிவாதி
இல்லறத்தில் கூட அது பிசக வில்லை
இதில் மூன்று அதில்மூன்று ஆறுபிள்ளை

அதிசயநல் மெழுகுவர்த்தி; கருத்தமேனி
அகந்தும்பைஎன்பதனால் சொல்ல வில்லை
அதிரசமாய்ப் பேசி ஒளி பரப்பி நிற்பார்
அணு அளவு கூட அவர் உருகமாட்டார்.
அதைக் கேட்போர் அப்படியே உருகிப்போவார்
அதனால்தான் அதிசய நல்மெழுகு வர்த்தி
கதிரேசன் சுட்டு அவைத்த அதிரேசந்தான்
கருத்தாலும் இனிக்கிறதே; அதிசயந்தான்,

---

## வ.சுப.மா. வாழ்த்து

பெரும்புல்வர் த. முருகேசனார்
சிதம்பரம்

உலகத்தின் மூத்தமொழி உயர்தனிச்செம் மொழியெனவே
உயர்ந்தோ ரேத்தும்
லமிகுநம் தமிழ்மொழியை நல்லாசான் புலரிடமே
கற்றுத்தேர்ந்து
புலமையொடு பொருவறுஞ்சீர் இயல்பனைத்தின்
நிறைகுடமாய்ப் பொலியும் செம்மல்
நிலவுலகில் தமிழ்மொழியைத் தாய்மொழியைக்
காப்பவருள் நிகரில் லாதோய்!

மன்னுபெருந் தமிழ்க் கடலாய் வள்ளுவத்தின் நெறிநிற்கும்
வாய்மை யாள!
பன்னரிய இலக்கியங்கள் உரைநடைநூல் நாடகங்கள்
பலவும் யாத்துப்

பொன்னொளிரும் பொருள்பொதிந்த வள்ளுவம்போல்
புதுச்சொற்கள் பலவும் ஆக்கும்
தன்னிகரில் மூதறிஞ! தமிழ்காக்கும் துணைவேந்தே!
தமிழே! வாழி

பனையளவு தமிழோடு தினையளவு ஆங்கிலமும் பயின்றா
ரின்று
முனைகின்றார் தாய்மொழியைப் புறக்கணித்தே
ஆங்கிலத்தை முதன்மை யாக்க
நினையன்றித் தமிழ்க்கரணாய் நிற்பாரைத் தமிழகத்தில்
காண கில்லேன்
வினைத்திட்பம் வினைத்தூய்மை உடையவரே
நின்கொள்கை வெற்றி! வெற்றி!

தில்லைவந்த மூவருமே அம்பலத்தில் தேவாரம் வாய்
மலர்ந்தார்
எல்லையிலாப் பேரன்பர் மாணிக்க வாசகரின் வாச கத்தை
நல்லதொரு மாணவன்போல் நடராசர் தம்கையால்
எழுதி யன்று
சொல்லரிய அம்பலத்தில் வைத்ததொடு திருவடியின்
நிழலைத் தந்தார்

உலகெலாம் எனவொலித்த அம்பலத்தில் திருமுறைக்கே
தடைகள் சொன்னார்
புலமைமிகு வாரணனார் அழகப்பன் வாகீசர் நாவுக்கரசர்
வலமிகுசீர் இராமலிங்கம் சுவாமிநாதன் ஊரனடிகள்
பழசண் முகனார்
நலம்பல செய் மெய்யப்பன் முருகேசன் திருமுறையின்
இயக்க மூலம்

திருமுறையை அம்பலத்தில் ஏற்றிடவே தெளிவோடும்
உறுதி யோடும்

ஒருமனதாய் அனைவரையும் உட்படுத்தி அரசினரின்
துணையுங் கொண்டு

மருவியசீர்த் தீட்சிதர்கள் மனமொப்பித் திருமுறையை
இசைக்கச் செய்த

பெருமைமிகு வரலாற்றைப் பொன்னேட்டில் பதித்திட்ட
பெரியோய் வாழி!

உழவர்கள்தாம் இடுபொருளை நீரதனால் உறிஞ்சியே
களை செழித்து

மழபயிரின் வளர்ச்சியினைத் தடுப்பதுடன் வருபயனும்
கெடுவதே போல்

மழலையரைத் தொடக்கத்தே ஆங்கிலத்தில்
பயிற்றுவித்தால் மரபி னோடு

பழந்தமிழர் பண்பனைத்தும் சீர்குலைந்து பாசமுமே
பட்டுப் போமே

எனப்பெற்றோர் ஆசிரியர் மாணவர்கள் அரசினரும் ஏற்கும்
வண்ணம்

மனக்கருத்தைத் துணிவுடனே வற்புறுத்தித் தமிழகத்தை
வலமாய் வந்து

கனவுலகில் உள்ளாரை நனவுலகுக் கலைக்கின்ற கருணை
மறவ!

மனமகிழ்ந்து வாழ்த்துகின்றோம் துணைநிற்போம்
மாணிக்க மலையே வாழ்க!

---

# இலக்கிய மதிப்பீடு

## வ.சுப.மா. இலக்கியக் கொள்கைகள்

முனைவர் ச.மெய்யப்பன்

வ.சுப.மா அவர்கள் தம் நூல்களை வகைமைப்படுத்தி நூலாக்கியுள்ளது வளர்தமிழ் ஆராய்ச்சிக்கு வழிவகுக்கும். இத்தொகுப்பு நிகழ்கால ஆய்வு வளத்திற்குக் கண்ணாடி. பேராசிரியரின் ஆய்வு வன்மைக்கு, அருந்தமிழ் ஆற்றலுக்கு இந்நூல் வரிசை பெருமை சேர்ப்பன,

**'தொல்காப்பியக் கடல்'**

இவ்வாசிரியர் தொல்காப்பியக் கடல்' எனும் பெரு நூலில் தமிழிலக்கணத்தின் தொன்மையையும் தூய்மை யையும் தன்மையையும் தலைமையையும் தாய்மையையும் நிறுவியுள்ளார். இந்நூல் தொல்காப்பிய ஆழத்தையும் அகலத்தையும் அறியத் துணைபுரியும். தொல்காப்பியரை மொழிநூல் அறிஞரெனவும், தொல்காப்பியம் தமிழின் உயிர்நூல் எனவும் இன்றும் இனியும் என்றும் வாழும் நூல் எனவும் விளக்குகிறார். தமிழில் தொல்காப்பியத் தின் நிழல்படியாத இலக்கியம் இல்லை என்று நிறுவுகிறார் எவ்வகை இலக்கியவடிவத்திற்கும் வித்தையும் வேரையும் தொல்காப்பியத்தில் காண்கிறார். பாரதியார்,கண்ணதா சன்வரை தொல்காப்பிய நிழல்படிந்துள்ள பாங்கினை விளக்குகிறார் தொல்காப்பியத்தின் பல்துறைப் பயனை- இனிமையினை, எளிமையினை எடுத்துவிளக்குவதைத் தலையாய பணியாகக் கொண்டுள்ளார். தொல்காப்பிய நெறிப்பட்ட இலக்கணமே என்றும் வாழும் என்றகருத் தினர். தொல்காப்பியம் தமிழ்க்கருவூலம். வற்றாத ஊற்று என்பதனை ஒவ்வொரு கட்டுரையிலும் உறுதிப் படுத்துகிறார்.

**சொல்லாக்கம், நடை**

மாணிக்கனாரின் புதிய சொல்லாக்கங்கள் தமிழுக்குப் புதுவரவும், தமிழுக்கு ஆக்கமும் ஆம். இந்தத் தலைமுறையில் இவரைப் போல் புதிய சொற்களைப் படைத்தவர் இலர். வாழும் சொற்களைப் படைப்பதில் வல்லவர்; பழஞ்சொல் புதுப்பிப்பதிலும் வல்லவர். இவர் படைத்த பல சொற்கள் பலராலும் ஏற்றுக்கொள்ளப் பெற்று நாளும் பயன் படுத்தப் பெற்று வருவது இவரது சொல்லாக்கச் செந்நெறிக்குச் சான்றாகும். இவருடைய சொல்லாக்கங்களைச் செய்தி இதழும் வானொலியும் நாளும் பயன்படுத்துவதே இவரது மொழிக் கொடைக்கு ஒப்பற்ற சான்றாகும். வெல்லும் சொல் படைக்கும் வித்தகரெனத் தமிழ்கூறு நல்லுலகம் போற்றுகின்றது.

இவர் நடையில் நின்றுயர் நாயகனாக விளங்குகிறார். இவர் நடை சொற் செட்டும், சுருக்கமும் தெளிவும் செறிவும் திட்பமும் நுட்பமும் வாய்ந்தது. புலமைநலம் சான்ற பெருமிதநடை இவர்நடை. பழந்தமிழ்ச் சொற்கள் மிகுந்து வரும் இலக்கியநடை. புதுச் சொற்கள் பொலியும் புதுவகை நடை. எல்லா வகையாலும் இவரது நடை தனித்தன்மை சான்றது. பேராசிரியருடைய மூன்று வரிகளைக் கொண்டே அவர்தமிழ்நடையின் தனித்தன்மையினை இனம் காணலாம். அவர் பயன்படுத்தும் சொற்கள் சொல்லாக்கம் சொல்லாட்சி ஆகியவை அவர் நடையின் இயல்பினை இனங்காட்டுவன.

**இலக்கியச்சாறு**

வ.சு.ப. மாணிக்கனார் பாடல்களில் தாம் ஈடுபட்டுத் துய்த்துப்பெற்ற இன்பத்தை வையம் பயனுற அளிக்கிறார். நல்லாசிரியராதலால் பாநலங்களை நயமுடன் விளக்குகிறார். நயத்தந்தை என மாணிக்கனார் போற்றும் பண்டிதமணியின் சுவைஉணர் நெறிகளில் இவரும் சுவை

ஞராகிறார். தாம் படைப்பாளராகவும், திறனாய்வாளரா கவும் திகழ்வதால் படைப்பு நுட்பங்களை மிக நுட்பமாக விளக்குகிறார். வெறும் சொல்லழகில் ஈடுபடாமல்,பாடல் களின்பொருள் ஆழத்தில் ஈடுபடுகிறார்.

பாட்டின் உயர்நிலையை மிகத் தெளிவாக விளக்கு வது இவரது கட்டுரைகளின் தனிச் சிறப்பாகும். பாநலம் பாராட்டலும் சுவைநலம் தேர்தலும் பொது இயல்பாக இருந்தாலும் இவரது திறனாய்வுக் கோட்பாடுதான் கட் டுரைகள் தோறும் செங்கோலோச்சுகிறது. இரண்டாம் நூற்றாண்டு இலக்கியமாயினும் இருபதாம் நூற்றாண்டு படைப்பிலக்கியமாயினும் அறம்சார்ந்த படைப்புக் கொள்கைகளையும், காப்பிய நேர்மைகளையும் இவர் இலக்கியக் கொள்கையாக உருவாக்குகிறார்.

இந்நூலிலுள்ள கட்டுரைகளில் சிறந்த கட்டுரை வடி வமும் வீறுமிக்க திறனாய்வுக் கொள்கைகளும் புதுமை யான விளக்கங்களும் புதிய இலக்கிய அணுகுமுறைகளும் அமைந்துள்ளன. தலைப்பினாலும், பொருளாலும், கட் டுரைவன்மையாலும் வெளிப்பாட்டுத் திறனாலும் இருப தாம் நூற்றாண்டுக்கட்டுரை இலக்கியத்தில் தனி இடம் பெறும் தகைமைசான்றன. ஒருபடைப்பாளியை, ஓர் ஆய் வாளரை, ஒரு நல்லாசிரியரை, எரு சான்றோரை அவர் கட்டுரைகள் அனைத்தும் இனங்காட்டுகின்றன.

பல்வகைக் கட்டுரைகள், பலவகை மலர்களின் பூக் குடலையாக, பல்சுவைக்கனிகளின் சாறாக அமைந்துள் ளதைக் கற்பார் எளிதில் உணர்வர் என்பது எனது உறுதி யான நம்பிக்கை.

**காப்பியப் பார்வை**

காப்பிய ஆய்வுகளில் புதுநெறி புகுத்தியவர் மூதறிஞர்

டாக்டர் வ.சு.ப.மாணிக்கனார். 'கம்பர்' என்னும் மிகச் சிறந்த ஆய்வு நூலில் காப்பியம் கற்கும் நெறியையும், துய்க்கும் நெறியைஃபும் புதுவகையில் விளக்கியுள்ளார். காப்பியக் களன்களின் இயல்புகளையும் கட்டமைப்புக் களையும் அகநலங்கள் புறநலன்களையும், தனிச்சிறப்புக் களையும் புதிய அணுகுமுறையில் விளக்கியுள்ளார். 'கம்பர்' நூல் காப்பிய ஆய்வில் தாய்மையும் தலைமையும் உடை யது; முற்றிலும் இம்மண்ணிற்குரிய மரபுகளை அடிப் படையாகக் கொண்டது; ஆசிரியரின் அறிவாற்றலின் தனிக்கொடையாகும்; முழுப்பார்வை கொள்கையினைப் படைத்தளித்தது இவரது தமிழ்த்திறனாய்வின் கொடை யாகும். இந்நூல் திறனாய்வு நெறியில் புதிய தடம் பதித் துள்ளது.

இந்நூலில் ஆசிரியர் தமிழ்க்காப்பியங்கள் பலவற்றின் பொது அமைப்பினையும் மொழி நலங்கவையும், ஆராய் கிறார். ஒவ்வொரு காப்பியக் கவிஞர்களின் படைப்புத் திறனையும் கருத்துக் கொடையினையும் விளக்குகின்றார். காப்பியம் கற்கத் தனிப் பயிற்சி, மொழிப்புலமை வேண்டும் என்பதையும் காப்பியக் கவிஞனின் கவியுள்ளம் காண்ப தற்கு ஆழ்ந்த புலமை வேண்டும் என்பதையும் குறிப்பிட்டு, காப்பியங்களில் புதைந்துள்ள நுண்ணமைப்புக்களைப் பல எடுத்துக் காட்டுகளுடன் விளக்குகின்றார். காப்பியங்களை அறிந்து புரிந்து துய்ப்போர் கொள்ளும் மன மகிழ்ச்சி யினையும் கல்வி விரிவினையும் சுவை நலம் தோன்ற விளக்குகிறார். ஒவ்வொரு கட்டுரையிலும் காப்பியங் களின் ஏதேனும் ஒருநலன் தக்க சான்றுகளுடன் ஆராய்ந்து விளக்கப் பெற்றுள்ளது. காப்பியத் திறனாய் வில் புதிய கோட்பாடுகளை, இந்நூல் உருவாக்கு கிறது. ஆசிரியர் புலமை நலத்தாலும், அறிவாற்றலா

லும், புதிய ஆய்வு நெறிகளை, திறனாய்வு முறைகளை, புதிய இலக்கிய நெறிகளைப்! படைத்துள்ளது இந்நூலுக்கு வலிமைசேர்க்கிறது.

ஆய்வு அவருக்கு இயல்பாக அமைந்ததொன்றாகும். திருக்குறளைச் செயல் நூலாக வள்ளுவமாக நூலாக்கினார். கம்பனைக் கற்கும்நெறியில்,புதியதடம் அமைத்தார். அகத்திணையியல் ஆய்வில் 'தமிழ்க்காதல்' நெறிவிளக்கினார். இவை என்றும் தமிழுக்குப் பொன்றாப்புகழ் தருவன. மறைமலை அடிகளாரின் ஆய்வுத்திறனும் கொள்கை உறுதியும் திரு.வி.கவின்மொழிநடையும் சமுதாய நோக்கும் பேராசிரியரின் எழுத்தில் பளிச்சிடுவதாகத் திறனாய்வாளர்கள் மதிப்பீடு செய்துள்ளனர்.

வெள்ளிவிழாக்கண்ட தமிழகப்புலவர் குழுவின் தலைவராக இருந்து இவர் ஆற்றிய பணிகள் அளவிடற்கரியன. தமிழ்மக்களின் நீண்ட நெடிய கனவுகளுக்கு உருவம் கொடுக்கும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் வடிவமைப்புக் குழுவின் தலைவராக விருந்தார். சாதனைகளால் சிறந்து விளங்கும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் தொல்காப்பியத் தகைஞராக, சிறப்புப்பேராசிரியராக நியமிக்கப்பெற்று உரை எழுதியுள்ளார். புலமையாலும், தலைமையாலும் சிறந்து விளங்கும் இவர்கள் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத் தலைவராகத் திகழ்கிறார்.

**திருக்குறட் சுடர்**

திருக்குறள் வாழ்க்கை நூல், நடைமுறையில் பின்பற்றப்படவேண்டிய நன்னூல். திருக்குறளைப்பெற்ற இனம் தனிச்சிறப்புடையது. வாழ்வின் எல்லாச் சிக்கல்களுக்கும் தீர்வு நல்கி, வழிகாட்டும் வளமுடையது என்பதனை இந்நூலில் விரிவாகவிளக்கியுள்ளார். திருக்குறள் அமைப்பினை

யும் அழகினையும் ஆராய்கிறார். சொல்லழகு,தொடரழகு களை விளக்குகிறார். இந்தியாவுக்கு மட்டுமன்றி வையகத் திற்கே வழிகாட்டும் வளமுடையது திருக்குறள் என்பதனை நிறுவியுள்ளார். ஆசிரியரின் ஒவ்வொரு கட்டுரையிலும் ஏதேனும் புதுச் செய்தி பொதிந்திருக்கும். அதுவே ஆசிரிய ரின் நிலைத்த புகழுக்குக் களமாகும்.

மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார் சங்க இலக்கிய வல்லு நர். சங்க இலக்கியச் சால்பு உணர்ந்த சான்றோர்.பாட்டும் தொகையும், பழுதறக் கற்றவர். சங்க அகத்திணை மரபு களை ஆய்ந்தவர்; சங்க இலக்கியப் பரப்பும் பாங்கும் பண் பும் ஆராய்ந்த பண்பாளர். சங்க இலக்கியத்தின் தூய்மை யையும் தாய்மையையும் போற்றுபவர். சங்க இலக்கியம் பரவ வழிவகுப்பவர். சங்க இலக்கியத்தைப் பல்வகைச் செம்பதிப்புக்களாகக் கொணரும் நோக்குடையவர். சங்கப் புலவர்களைச் சான்றோராகக் கருதி வழிபடும் மரபைப் போற்றுபவர். அவர் எழுத்திலும் பேச்சிலும் சங்க இலக்கி யச் செல்வாக்கைக் காணலாம். சங்க இலக்கியமே தமிழர் வாழ்வின் உயிரெனக் கருதுபவர். சங்க நெறிக்காவலர் இந்நூல் சங்க இலக்கிய ஆய்வாளருக்கு ஒருவழிகாட்டி.

---

## மூதறிஞர் வ.சுப. மாணிக்கனாரின்

# சொல்லாக்கம்

முனைவர் பழ.முத்துவீரப்பன்.

வளர்தமிழுக்கு வளஞ்சேர்க்கும் சான்றோர்களுள் தலையிடம் பெறுபவர் மூதறிஞர் டாக்டர். வ. சுப. மாணிக்கனார். பெருமையும் பெருமிதமும் நிரம்பிய பெரும் புலவர். தமக்கெனத் தனிநடை யுடையவர். அந் நடை ஆர்ப்பரிக்கும் அலை நடையல்ல; ஆற்றுப்படுத்தும் அறநடை, சிந்தனையைக் குழப்பும் சிக்கல் நடையல்ல சிறுசிறு தொடர்களால் அமைந்த செறிநடை. முன் னைய இலக்கியங்களை மடுத்தெழுதும் முதுநடையல்ல; மொழித்திறன் பெருக்கும் பழநடை' கவிநடை, ஆங்காங்கே தனித்தன்மை காட்டும் சொல்லாக்கங்கள் நிரம்பிய சுவை நடை, மொத்தத்தில் எளிநடை, தெளிநடை, இவர்நடை. இந்த அணிநடையில் அமைந்த புதுச் சொற் பூக்கள் இங்கே மாலையாக்கப்பட்டுள்ளன.

---

இலக்கியச் செம்மல்

## இரா. இளங்குமரன்

திருநகர், மதுரை

மாணிக்கர் ஒரு பல்கலைக் கழகம்! தமிழ்வளப் பல் கலைக்கழகம்! துறைதோறும் துடிப்புடனும் துலக்கமுடனும் தொண்டாற்றி வரும் வளப்பல் கலைக் கழகம். அக்கழகம் செயலாற்றி வரும் அருமையும் பெருமையும், உரமும் ஊட்டமுமிக்க துறைகள் பலவற்றுள் ஒன்று சொல்லாக்கத் துறை அத்துறை, அவரைப் படைப்பாக்க ஏந்தலாகப் பளிச்சிடக் காட்டுதல் வெள்ளிடை!

மாணிக்கர் சொல்லாக்க வளம் ஒரு நூலாக். அளவுக்கு அமைந்துள தெனின், அஃதெளிதான செயலா மோ? அவ்வாறு தணிநூலாக்க அளவுக்குச் சொல்லாக்கம் செய்தார் பாவாணரும் மாணிக்கருமே எனின் தமிழுலகம் இவர்களை எப்படியெல்லாம் தலைமேற் கொண்டு போற்ற வேண்டும்! ஆனால், "சொல்லாக்கிகள் புகழ் வேட்டுவர் களாக அமைவது இல்லை" என்பது அவர்களைப் புத்தம் புது மணிமேகலையராக மதிக்க ஏவுகின்றது! அம்மேக லையார் தாமே புகழும் வேண்டாப் புகழாட்டியாய் "ஆபுத்திரன் கை அமுத சுரபி" "யாவரும் வருக" எனக் கொடையாட்டியாகத் திகழ்ந்தார். "கனிதந்தால், கனி யுண்ணவும் வல்லிரோ" எனக் கூவிக் கூவி அழைத்து அருட்கனிகளை வழங்கிய அப்பரடிகள் போல, "என் கடன் பணி செய்து கிடப்பதே" எனச் சொல்லாக்கிகள் இருப் பினும், அச் சொல்லாக்கங்களைப் பரப்பிகளாக எழுத் தாளர்கள் விளங்க வேண்டுதல் கடமையன்றோ? வளருந் தமிழுக்கு வளஞ் சேர்க்க மெய்யாகவே அரசு கருதுமா னால் சொல்லாக்கிகளை எத்தனை எத்தனை வழிகளால் ஊக்கி வருதல் வேண்டும்! இவ்வகையான் எல்லாம் தமிழ் உலகு விழிப்புறும் நாளே பழிப்பறு நாளாம்!

---

முனைவர் இரா. மோகன்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

பாடலிபுத்திரம் பொன் மலிந்தது எனில், மூதறிஞர் வ.சுப. மாணிக்கனாரின் மொழிநடை புதுச் சொல் மலிந்தது எனலாம். தமிழறிஞர்களுள் அவரளவு துறைதோறும் புதிய சொலாக்கங்களைப் படைத்தவர் எவரும் இலர். என்று கூடச் சொல்லிவிடலாம். இந்நூலினைப் பயில்வோர் இம் முடிவுக்கே வருவர். இந்நூலாசிரியர், வ.சுப மாணிக்கனார் தம் நூல்களில் படைத்துள்ள சொல்லாக்கங்களை வகுத்தும் தொகுத்தும்தந்துள்ளார்; தனிச்சொல்லாக்கம், கூட்டுச் சொல்லாக்கம் என்ற இருபெருந் தலைப்புகளில் வ.சுப.மா.வின் சொல்லாக்கங்கள் இந் நூலில் பாகுபடுத்தப்பட்டுள்ளன.

தேவையை நிரப்ப உருவானவை. புதுமை படைக்கும் ஆர்வத்தால் உருவானவை, தனித்தன்மை காட்டும் விழைவால் உருவானவை. ஒப்புமை யாக்கமாக உருவானவை என வ.சுப மாணிக்கனாரின் சொல்லாக்கங்களை நான்கு வகையாகப் பாகுபடுத்தித் தந்திருக்கும் இந்நூலாசிரியரின் முயற்சி போற்றத்தக்க தாகும்

சான்றோர் மாணிக்கர் சங்கத்தமிழனையதூயர். வள்ளுவநெறிகளை வாழ்ந்து காட்டும் வளர் புகழ் வாழ்வினர் இப்பெரியாரிடம் தமிழ்பயிலும் பேறு பெற்றவன் நான்.

---

பேராசிரியர் மு.வை.அரவிந்தன்
அரசுகலைக்கல்லூரி, கிருட்டினகிரி

தமிழ்ச் சான்றோர் வ.சுப. மாணிக்கனாரின் சொல்லாக்கம் என்னும் நூல், நான் கற்று மகிழ்ந்த சிறந்த தமிழ் நூல்களுள் ஒன்று. இது என் சிந்தனைக்கு விருந்தாய் அமைந்தது; என் ஆய்வுக்குத் தூண்டுகோலாய் உதவியது.

இந்த நூல் அளவால் சிறியது; ஆனால், கூறும் பொருளால் பெரியது. தஞ்சாவூர்க் கோபுரத்தின் வடிவத்தை அரிசி ஒன்றில் செதுக்கிக் காட்டிய கலைத் திறனை ஒரு சிற்பியிடம் நான் கண்டு வியந்தது உண்டு. அந்த வியப்பு மீண்டும் என்நெஞ்சில் ஏற்பட்டது, 'மாணிக்கனாரின் சொல்லாக்கம், என்ற நூலைக் கற்று மகிழ்ந்த போது! பல அரிய நுண்ணிய கருவிகளை உள்ளே அடக்கிவைத்துக் கொண்டுள்ள சிறிய கைக்கடிகாரம் போன்று, இந்தச்சிறு நூல் அமைந்துள்ளது.

இந்த நூலில், பக்கத்திற்குப் பக்கம் புதுமை ஒளி வீசுகிறது; பத்திக்குப் பத்தி கருத்து மின்னல் பளிச்சிடுகிறது வாக்கியந்தோறும் ஆய்வுச் சிந்தனை நிரம்பியுள்ளது.

மாணிக்கனார் இலக்கண இலக்கியப் புலமை மட்டும் உடையவர் அல்லர்; அவர் நல்ல கவிஞர்; புதுமை நாட்டம் உடையவர். அவர் சிந்தனை புதிது. மேலும் அவர்களிடம் விழுமிய உணர்ச்சியும், உயர்ந்த கற்பனையும், சிறந்த படைப்பாற்றலும் நிரம்பி இருப்பதால் தான் அவர்களால் புதுச் சொல்லாக்கங்களைத் தமிழுக்குத் தர முடிகின்றது.

அவர்களுடைய புதுச் சொல்லாக்கத்திற்கு இலக்கண

இலக்கியப் புலமை துணை செய்திருக்கலாம். வழிகாட்டி இருக்கலாம்,

புதுச் சொல் படைக்கும் வித்தகம் கைவரப் பெற்ற மாணிக்கனார், தமக்கென்று ஓர் அணியை உண்டாக்கி அந்த அணியின் கொள்கை முழக்கமாகப் பின்வரும் பொன்னுரையைப் படைத்து வழங்குகின்றார்.

"வளம் படைத்த தமிழ் மொழிக்குச் சொல்லாக்கிகள் மிகத்தேவை. அவ்வப்போது சொல்லை வடித்துக் கொடுக்காதவன் – வடித்துக் கொள்ளாதவன், மொழிக் கடன் ஆற்றாதவன் ஆகின்றான். வேற்றுச் சொல் வரவுக்கு இடங் கொடுப்பவன் ஆகின்றான்" (காப்பியப் பார்வை – ப.194)

பதிப்புச் செம்மல் ச. மெய்யப்பன், மாணிக்கனாரின் சொல்லாக்கம் பற்றிக் 'காப்பியப் பார்வை'யின் பதிப்புரையில் (ப.VI)கூறியுள்ள கருத்து, சரியான மதிப்பீடாக அமைந்துள்ளது.

"மாணிக்கனாரின் புதிய சொல்லாக்கங்கள் தமிழுக்குப் புதுவரவும் ஆக்கமும் ஆம். இந்தத் தலை முறையில் இவரைப் போலப் புதிய சொற்களைப் படைத்தவர் இலர். வாழும் சொற்களைப் படைப்பதில் வல்லவர்; பழஞ்சொல் புதுப்பிப் பதிலும் வல்லவர். இவர் படைத்த பல சொற்கள் பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு, நாளும் பயன் படுத்தப் பெற்று வருவது இவரது சொல்லாக்கச் செந்நெறிக்குச் சான்றாகும்.

இந்த மதிப்பீடு, இத்த நூலுக்கென்றே எழுதி வைத்த மணி மொழி போல் உள்ளது. இதனை இந்த நூலின் ஆசிரியர் கண்டெடுத்துத் தக்க இடத்தில் மேற்கோள் தந்துள்ளார் (பக்.13,14)

தமிழுடன் காலந் தோறும் தகுந்த அடை மொழிகள் சேர்ந்து தமிழைச் சிறப்பித்துள்ளன. செந்தமிழ், சங்கத் தமிழ், தெய்வத்தமிழ், கன்னித்தமிழ் முதலிய தொடர்கள் சிறப்பு வாய்ந்தவை. புலவர்களின் பெயருடன் சேர்ந்து மூவர் தமிழ், கம்பர் தமிழ், ஆழ்வார்தமிழ், சேக்கிழார் தமிழ், அவ்வை தமிழ், பாரதி தமிழ் முதலிய தொடர்கள் வழங்குகின்றன.

இவற்றைப் போலவே மாணிக்கனாரின் புதிய சொல்லாக்கங்கள் 'மாணிக்கத்தமிழ்' என்ற பெயரைப் பெறும் வருங்காலம் அந்தத் தொடரைப் போற்றும்; போற்றி மதிக்கும்.வருங்காலத்தவர்க்காகக்காத்திராமல் இன்றைய தலைமுறையினரும் மாணிக்கத் தழிழை அடையாளம் கண்டு போற்றி மதிக்கத் தொடங்கிவிட்டனர்.

---

இவ்வகையில் மூதறிஞர் வ.சுப. மாணிக்கனாரின் தமிழுக்கு அளித்த கொடைகளைப்பதிப்பகம் ஆய்வுநூலாக வெளியிடும் திட்டத்தில் இது முதல் நூல். மாணிக்கனாரின் மொழி நலம், நடைநலம், இலக்கியப் புலமை, மொழிக் கொள்கை, கல்விக் கொள்கை, சமுதாயப் பார்வை முதலிய தலைப்புக்களில் இன்னும் சில நூல்களைப் பதிப் பகம் வெளிக்கொணர இருக்கிறது. நாற்பது ஆண்டு கால எழுத்துப் பணியினைப் பல்வேறு நிலைகளில் ஆய்வு செய்து ஆசிரியர் ஆளுமையினையும், தனித்திறன்களையும் மதிப் பீடு செய்வது இத்திட்டத்தின் நோக்கமாகும்.

படைப்பிலக்கியத்தில்தான், அதுவும் குறிப்பாக நாட கத்தில் சமுதாயத்தின் தேவைக்கேற்ப, காலத்திற்கேற்ப உடனடியாகப் புதுப் புதுச் சொற்களாகப் பலநூறு சொற் களைப் படைத்துள்ளார்கள். சொற்களின் உயிராற்றலுக் கேற்ப, இனிமைக்கேற்ப, எளிமைக்கேற்ப அவை வாழ்வு பெறுகின்றன. இவர் போல் நம் காலத்தில் புதிய சொற் களைப் படைப்போர் இலர், பழஞ்சொற்களைப் புதுக்கு வோர் பலர்.

ஆசிரியர் எப்பொழுதும் சொற்செட்டை விரும்புபவர். நன்றியுடையேன் என்பதனை நன்றியன் என்றும் ஆட்சியா ளர் என்பதை ஆட்சியர் என்றும் குறுக்குவர். சொற்களை ஓரசை, ஈரசைச் சொற்களாகவே உருவாக்குவார்கள். கட்டுரைகளிலும் பொருளற்ற வெற்றுச் சொற்களைப் பயன்படுத்தமாட்டார்கள். இயல்பாகவே சொல்லாக் கத்தில் நாட்டமுடையவர்கள். மொழிப் புலமையும்

இலக்கண அறிவும் நிரம்பப் பெற்றவராதலால் விதிகளுக் கேற்பவே சொற்கள் இவர்களால் படைக்கப் பெறுகின்றன. கால வெள்ளத்தால் கரைந்து போகாமல் உயிர்ப்புள்ள சொற்களை உருவாக்குகிறார்கள். தெளிந்தசிந்தனையால், ஆழ்ந்த இலக்கியப் பயிற்சியால், சிறந்த மொழி நூற் புலமையால் இவர்கள் படைக்கும் சொற்கள் உயிராற்றல் பெற்று உலாவருகின்றன.

பேராசிரியர் இதுவரை எழுதிய கட்டுரைகள் அனைத் தையும் பொருளுக்கேற்பப் பகுத்து மாணிக்கனார் நூல் வரிசையென ஒன்பது நூல்களைப் பதிப்பகம்வெளியிட்டது. அத் தொகுப்பினை ஒருசேரப் பயின்றோர் ஆசிரியரின். நடை நலத்தையும், சொல்லாக்க வளத்தையும் பெரிதும் போற்றினர். அந்நூல்வரிசையே இந்நூலுக்கு அடிப்படை. கட்டுரைகளை எண்ணிட்டுக் காட்டவும் நூற்பெயர் சுட்டவும் அந்த வரிசை உறுதுணையாய் அமைந்தது. உற்ற துணையாக அமையவே ஆய்வு எளிதாக அமைந்தது. மேலும் பல்வகை ஆய்வுகளுக்கு இந்நூல் வரிசை அடித் தளமாய் அமையும் என்பது என் நம்பிக்கை.

ஒரு ஆசிரியரின் எழுத்தாளரின் படைப்பு முழுவதை யும் ஒருசேரப் பார்த்து அவர்தம் சொல்லாக்கங்களை ஆராய்வதில்லை. இதுவே முதல்நூல்- முதல் முயற்சி. இதில் இருவேறு கருத்து இருக்க முடியாது.

---

பேராசிரியர் இளங் குமரன்.

தமிழ்த் திறவோர்களுள் தலையாய ஒருவர் வ.சுப. மாணிக்கனார்.

சங்கச் சான்றோர் வாய்மை நெஞ்சத்தை 'வாழ்வுடை மை'யாக்கிக் கொண்டுள்ளவர் மாணிக்கனார். தமிழ்க்காதல் சங்கச் சான்றோர் படைத்த அகப்பரப்பு அத்துணையின்

முழுப்பரப்பும் ஆய்ந்து பிழிந்து எடுத்துத் தந்த தீம்பழல் சாறு!

வள்ளுவர் கண்ணெதிரில் தோன்றித் தம் வாய்மை நெஞ்சத்தை வெளிப்படுத்திக் காட்டுவார் போலக் காட்டப் பெற்ற பழுத்த ஆய்வுப் பனுவல் வள்ளுவம்.

தொல்காப்பிய ஆய்வா, சிலம்பின் ஆய்வா, கம்பன் ஆய்வா, பின்னாளைப் பாரதியாய்வா எல்லாம் எல்லா ஆழத்தின் ஆழத்துள் சென்று மணிக்குவைகளை அகழ்ந் தெடுத்துத் தமிழுலக வைப்பாக்கி வைப்பதில் இணையிலார் மாணிக்கர்.

உலையா முயற்சிக்கும் உயர்ச்சிக்கும் ஓரெடுத்துக் காட்டு வேண்டுமா, தமிழ்வீறு காட்டும் தகைசான்றவாழ்வுக்கு எடுத்துக் காட்டு வேண்டுமா, உள்ளும் புறம்பும் ஒத்துத் திகழும் ஒரு பெருவாழ்வுக்கு எடுத்துக்காட்டு வேண்டுமா, உற்ற பதவிகளுக்கெல்லாம் உயர்வற உயர்ந்த புகழ் சேர்த்த புகழ் வாழ்வுக்கு எடுத்துக் காட்டு வேண்டுமா, தமிழ் மூதறிஞர் மாணிக்கனாரைச் சுட்டுதல் சாலும்!

மாணிக்கனார் உயர்சிந்தனையாளர், உலகப்பேரறிஞர் களோடு ஒப்பிட்டு எண்ணத்தக்க ஒரு பெருஞ்சிந்தனையாளர்: எண்ணியதைத் திண்ணிதாய் வடிக்கவல்ல எழுத்துச் சிற்பி! பொழிவு முகில்!

மாணிக்கனார் ஓடுகிற ஓட்டத்திலேயே புத்தாக்கச் சொல் படைக்க வல்ல படைப்பியல் வல்லோர்! நோய் மூலங்கண்டு நுண்தேர்ச்சியால் மருத்துவத் துறைவல்ல தமிழ்ச்சித்தரெனத் திகழும் தமிழ்ச் சித்தர்! அப்பழுக்கற்ற, உணர்வால், அடாச் செயல் எங்கு நிகழினும் அறப்போரால் தடுத்து நிறுத்தித்தலை வெற்றி கொள்ளவல்ல தனிப்

பெருங் காந்திய வழியர்! எங்கும் எந்நிலையிலும் தாம் தமிழ் மகனார் என்பதை மறவாத தவமகனார்!

முப்பத்து மூன்றே வரிகளில் எழுதப்பட்டமுகவுரையை முகப்பாகக் கொண்டது வள்ளுவம். அச்சிறு முகப்பில் எத்துணை நலப்பாடுகள் – நயப்பாடுகள்–நறுமைகள்!

வள்ளுவம் எப்படிப்பிறந்ததாம்?

"சென்ற காலநம் மொழித்தாயின் இயற்கைவளம் நிகழ்காலத் தமிழ் மக்களின் மொழியறிவுக் குறைவு, வருங் காலத் தமிழகத்தின் தூய பெருஞ்செயல்கள் என இவ்வெல் லாம் நீள நினைந்தேன். இந் "நினைவுச் சூல்" முதிர்ச்சி யால் பிறந்தது வள்ளுவத் "தமிழ்க் குழவி!" பாட்டுருவ கம்,உரையாட்டில் ஏவல் பூண்டொழுகுகின்ற அழகு இது.

"வள்ளுவநடை நிறுத்திக் கற்கச் செய்யும்; விளங்கிப் படிக்கத் தூண்டும், உண்மைகாணச் சொல்லும்; அரிய நடையதன்று;-உரிய நடையது"-இவை தம் உள்ள உரை கல்லில் தீட்டிக் கண்டு, மாற்று ஈதெனமதிப்பிட்டுரைக்கும் மணிநோட்டகர் பார்வையுரைகள்.

"வள்ளுவம் தொகுப்பு நூலன்று; முதற்கண் முழுதும் வரையறுத்துக் கொண்டு முரணறுத் தெழுதிய முறைநூல். இம் மதிப்பீடு நூலாசிரியர் சொல்வதற்கு எத்தகு திணிவு வேண்டும்! துணிவு வேண்டும்! இக்கருத்தை நூன்முறை வல்ல எவரும் ஓரெண் முனையளவேனும் மாற்றுரைக்க வியலா வண்ணம் அமைந்துள்ள அருமையுடையது வள்ளு வம்!

இலக்கியப் புதுநெறியாகக் கற்பனைப் பொழிவு நூல் வகை கொண்ட மாணிக்கனார் தேர்ச்சியுள்ளம், முகப்பிலே பளிச்சிடுதல் முதல் முடிவு காறும் பளிச்சிடுவதை எவரும் காணலாம். கண்டு களிக்கலாம்.

---

முனைவர் வெ. பழநியப்பன்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

மனித வாழ்வில் இத்துணை ஆண்டுகள் வாழ்ந்தோம் என்பதா பெருமை? வாழ்ந்த அத்துணை ஆண்டுகளும் தம்மைத் தம் நாட்டின் தம் இனத்தின் தம் மொழியின் உயர்விற்காகத் தியாகம் செய்து கொண்ட பெருவாழ்வு மூதறிஞர் செம்மல் டாக்டர்.வ.சுப. மாணிக்கனாரின் நல்வாழ்வு.

'கல்லாத இனமெல்லாம் கற்க வைத்தான' என்று பாடிய பெரும்கனார் தம்மைச் சார்ந்தவர்களை யெல்லாம் கல்வியாளர்களாய் ஆராய்ச்சி அறிஞர்களாய், தமிழ்த் தொண்டர்களாய்ச் சிறக்கச் செய்தார். வாய்மை அடக்கம் நேர்மை என அனைத்துப் பண்புகளாலும்சிறந்துவிளங்கிய அத்தமிழ் முனிவர், அழகப்பா கல்லூரியிலும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் ஆயிரம் ஆயிரம்இளைஞர்களுக்குத் தமிழ்ப்பாலூட்டினார். மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் பொறுப்பேற்றுக் கல்வியாளர் என்பதுடன் நேர்மையான நிருவாகி என்பதனை நிறுவினார். வாழ்வின் இறுதி தமிழ் வழிக் கல்வி இலக்கியமாகச் சிறந்தது. எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்ற விழைவு மிக்க தமிழக அரசின் முதன்மைக் குடிமகன் இம்மூதறிஞன். உயர்தனிச் செம்மொழியாம் தமிழ் மொழியின் வாழ்வே தம் வாழ்வு என்று கருதிய இம் மூதறிஞனின் ஆக்கமிக்க குறிக்கோள்களைச் செயற்படுத்திக் கலைஞர் அரசு பீடும் பெருமையும் கொள்ளும் என்று நம்புகிறோம்.

சிதம்பரம் **மயில்வாகனன்**

முதறிஞர் வ.சுப. மாணிக்கனார் மறைவு கேட்டுத் துடித்தேன்! இதயமோ வெடித்து விடும் போல் இருந்தது! தமிழ் கூறும் நல்லுலகிற்கு வழிகாட்டியவர். புதிய சிந்தனையாளர்! பூத்துக் குலுங்கும் எண்ணக் கலைஞர்!

சங்க நெறிக்கு வடிவம் தந்த சான்றோர்!
குறள்வழி வாழ்ந்து காட்டியவர்!

வான்மறை வள்ளுவத்தை உலகிற்கு வழங்கியவர்! தமிழ்க் காதல் கொண்டு தொல்காப்பியத்தில் புதுமை பல கண்டவர்!

காப்பியப் பார்வையில் களம் பல ஆய்ந்தவர்! தமிழ் வழிக் கல்வி இயக்கத்தில் ஒத்த கருத்துடையவர்களை ஒன்று திரட்டியவர்!

தளபதியாய், தலைமகனாய், தானைத்தலைவனாய், தானே தலைமை ஏற்று நாடு தழுவிய இயக்கத்தை நடாத்தியவர்!

திருமுறை அம்பலம் ஏறவும் -
மழலைப் பள்ளிகளில் ஆங்கிலத்தை அகற்றவும்—
தமிழ்வழிக் கல்வி இயக்கத்தை நடத்தவும் போர்க் கால அடிப்படையில் இளைஞர்களை ஒன்று திரட்டி வழிநடத்திய பெருமகனார்! தமிழ் உணர்வு கொண்ட எம் போன்ற பள்ளி ஆசிரியர்கள் இடம் பரிவும் பாசமும் காட்டியவர்! அவர் நினைவுகளால் எங்கள் நெஞ்சம் நெகிழ்கிறது!

வளர்க அவர் பணி! வாழ்க அவர் புகழ்!

---

மூதறிஞர் வ.சுப.மா.

## பாநலம்

ச. மெய்யப்பனார்

பதிப்பாளும் செம்மலான் பல்கலை தேர் வல்லாளன்
    பல்லோர் நண்பன்
மதிப்பாளும் நிறுவனத்தான் வளர்தமிழின் கரையனை
    -யான் மடிமை யில்லான்
குதித்தாளும் பெருமான்தன் குனித்தவடி மனத்தகத்
    -தான் குறிக்கோள் மிக்கான்
உதித்தாளும் ஞாயிறுபோல் ஒளிசிறந்து மெய்யப்பன்
    உயர்ந்து வாழி!

---

முத்தமிழ்க் காவலர்

கி.ஆ.பெ. விசுவநாதம்

முத்தமிழ்க் காவலன் மூத்த தமிழ்த்தலைவன்
சித்த மருத்துவச் செம்மலான்-ஒத்த
புலவர் குழுக்கண்டான் பொய்யில் அறிஞன்
நிலவரை வாழ்க நிறைந்து.

## உ.வே.சா.

பார்காத்தார் ஆயிரம் பேர்; பசித்தார்க் காகப்
பயிர்காத்தார் ஆயிரம் பேர்; பாலர்க் காக
மார்காத்தார் ஆயிரம்பேர் வாழ்ந்த நாட்டில்
மனங்காத்த தமிழ்த்தாய்'' என் உடைமை யெல்லாம்
யார்காத்தார்'' எனக்கேட்க ஒருவன் அம்மா
யான்காப்பேன் எனவெழுந்தான் சாமி நாதன்
நீர்காத்த தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்
நிலைகாத்த மலையிமய நெற்றி மேலான்.

பொய்யாத தமிழ்க்குமரி ஈன்ற சாமி!
போகாத புகழ்க்கன்னி மணந்த நாத
செய்யாத மொழித்தொண்டு செய்த ஐய!
சிறுகாத நெஞ்சத்தேம் வணங்கு செம்மல்!
எய்யாத திருவடியால் எண்பத் தாண்டும்
இளையாத உள்ளத்தால் எங்குஞ் சென்று
நெய்யாத தொன்னூல்கள் நிலைக்க வைத்த
நீங்காத தமிழ்க்குயிரே! நின்தாள் வாழ்க!

---

## வள்ளல் அழகப்பர்

கோடி கொடுத்த கொடைஞன்; குடியிருந்த
வீடுங் கொடுத்த விழுத்தெய்வம்;—தேடியும்,
அள்ளிக் கொடுத்த அழகன்; அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு.

---

## தமிழ் சூடி

தமிழ்சூடி வழிபாடு செய்வாய் குழந்தாய்
தாய்மொழி தவறாது கற்பாய் குழந்தாய்
திருக்குறள் கண்போலத் தெளிவாய் குழந்தாய்
தீமைகள் மனத்தினும் தீண்டாய் குழந்தாய்
துடிபோலப் பள்ளிக்குத் தொடர்வாய் குழந்தாய்
தூய்தமிழ் எங்குமே சொல்வாய் குழந்தாய்
தென்றலில் நன்றாகத் திளைப்பாய் குழந்தாய்
தேனினிய நூலகம் செல்வாய் குழந்தாய்
தைத்திங்கள் பொங்கலில் தளிர்ப்பாய் குழந்தாய்
தொண்டுகள் பல செய்யத் துடிப்பாய் குழந்தாய்
தோலாத தமிழ் நூல்கள் தொகுப்பாய் குழந்தாய்
தமிழ்சூடி வழிபாடு செய்வாய் குழந்தாய்

---

# மடல் காட்டும் வாழ்வு

## வ.சுப. சொக்கலிங்கம்

அன்புச் சகோதரர் மெய்ப்பனார்க்கு, வணக்கம் 15.20. தினங்களுக்கு முன் எழுத நினைத்த கடிதம். அண்ணன் அவர்களின் மறைவுக்குப் பின் எழுதும் நிலையில் வந்து விட்டது. சென்ற புதன் கிழமை. இந்நேரம் (பகல் 1 மணி) அண்ணன் உடல் இருந்தது. மலர்க்குவியல்களுக்கு உள்ளே புதைந்து கிடந்தது. சென்ற புதனன்று 4 மணிக்கு எரி யூட்டினோம். ஒருவாரம் சென்று விட்டது. இனி என்ன? நாளை எண்ண வேண்டியதுதான். உலகமே வெறுத்துவிட் டது. யாரையும் நிமிர்ந்து பார்க்க மனங் கொள்ளவில்லை. இரவு முழுதும் தனியே அழுகிறேன். என்ன செய்வது என்றும் புரியவில்லை.

தமிழுக்கு விடுதலை பெற்றுத் தர, இயக்கம் பல கண்ட தளபதி போர் முனையில் மறைந்து விட்டார்.படை சிதறுண்டு நிற்கிறது. இனியார்இவற்றைக் கூட்டிச் சேர்ப் பது. பாழும் எமன், அதிகமில்லை, இன்னும் ஓராண்டு பொறுத்திருக்கக் கூடாதா? சன்மார்க்க சபை அனாதை யாகி நிற்கிறது. தமிழுக்கு, இறைவனும் பகையாகி விட் டானோ? தமிழை அம்பலம் ஏற்றிய மகனை அம்பலத்தர சன் ஏன் விரைவில் அழைத்துக் கொண்டான். யான் உணர்ந்த கேள்விஞானம் எல்லாம் நினைவு கூர்கிறேன். எதுவும் அமைதி கொள்ள இடந்தரவில்லையே.

அண்ணன் அவர்களின் இயக்கங்கள் எல்லாம் வெற்றி பெற்றுத் தமிழ் நிலை பெறும் நிலையில் வரலாற்றில் இடம்

பெறும் நிலையில் ஏன் இப்படி நடந்தது என்றும் புரிய வில்லையே.

இன்னும் ஓராண்டு இருந்திருந்தால் கூடபோதுமே? அண்ணனின் தொண்டு வரலாற்றில், கல் எழுத்தில், இடம் பெற்றுக் கொண்டிருக்கும் போது முற்றும் பொருள் ஏன் இப்படி நடந்தது.

இறைவா, இறைவா, தமிழ்ச்சாதியை என்னதான் செய்ய நினைத்திருக்கிறாய்''என்று புலம்ப வேண்டியதாக இருக்கிறது. என்ன சொல்லி, என்ன? நாம் கடவுளை நம்பு கிறவர்கள்; அவர் நல் வழி காட்டுவார். தமிழுக்கு எல் லாம் நன்மையாக முடியும். தூய தமிழ் மகனின் ஆசைகள் கலைஞர் அவர்களின் துணையால் முற்றும் விரைவில் நிறை வேறும் என நம்புவோம்; கலைஞரை முற்றும் நம்பு வோம்.

---

தமிழ்மொழி வழிக்கல்வி இயக்கம்.

பேரன்புடைய நண்பர் முருகேச,

நலம். இருவிழாக்களும் எழுச்சியாக நடந்தன. தமிழ் வழிக்கல்வியியக்கம் பல்கலைக்கழகச் சூழ் நிலையில் நிகழ்ந் தமையின் கூடுதல் வலுவேற்பட்டது. மேலும் சிலநகரங் களில் நடைபெறும் ஏற்பாடுகள் உள. நம் பிறப்பின் பொறுப்பு பெரிது. திரு மெய்யப்பனார் போன்ற புரவலர் பலர் கிடைப்பின் இன்னும் வளர்ச்சி பிறக்கும். வளரும். பதிப்புச்செம்மல் மெய்யப்பன் இயக்கப்புரவலராக விளங்கு வது தமிழின் பேறு, துணிவாகவும் நெறியாகவும் பதமாக வும் வெற்றி பெறுவோம். தமிழகத்தில் எத்துறையிலும்

எவ்விடத்திலும் தமிழுக்கே முதலிடம். பிறவற்றிற்குப் பின்னிடம். இதுவே தமிழ் மந்திரம். ஆடுர் இராமலிங்கம் தலைமையாசிரியர் சாமிநாதன், மயில்வாகனன், பெரியார் தொண்டர். திரு. திருநாவுக்கரசு எல்லோரும் கலந்து கொண்டது மேலும் தில்லைத் திருமுறைப்பணி உரம் பெறும். நாம் நனவை இப்போது கனவாகக் காண் கின்றோம். உடல்நலமும் குடும்ப நலமும் பெறுக. திருச்சி ராப்பள்ளியிலிருந்து மாற்றவேண்டா. அங்கிருப்பதே உறுதியாகும். உயர்வாகும். இன்னொருபையனுக்கு வேலை பெறுக

அன்பன் வ.சுப. மாணிக்கம்.

ஏனைநகரங்களில் தமிழாசிரியர் கழகங்கள் ஈடுபெறப் பார்க்க வேண்டும்.

---

பேரன்புள்ள முருகேச, 12.9.88

நலம். பேராசிரியர் ச. மெய்யப்பன் மணிவாசகர் நூலகம் முடஙகல்வந்தது. அக 1உ சனி தமிழ் வழிக்கல்வி யியக்க ஊர்வலமும் பொதுக்கூட்டமும் சிதம்பரத்தில் நடத்தலாமென நீவிர் இருவரும் விரும்புவதாக எழுதி யிருந்தார். எதிர் பார்த்த எழுத்து வரவு கிடைத்தது. அவ் வாறே நடத்தலாம். மெவுக்கு விரிவாக எழுதியிருக்கின் றேன். அறிஞர் சாரங்க பாணியையும் கலந்து கொள்ளுங் கள். அவ்விவரங்களைப் பார்த்துக் கொள்ளுங்கள். தமிழ கத் தமிழாசிரியர் கழகம் ஈரோட்டில் 25.9. ஞாயிறு ஊர் வலம் கூட்டம் சிறப்பாக நடத்துகின்றது. ஈரோடு செல் கின்றேன். சிவகங்கை, தஞ்சை, தூத்துக்குடி, நாகர்கோயில் இடங்களிலும் ஏற்பாடுகள் உள. தமிழ் உரிமை பெறும். ஏற்பாடு செய்து எழுதுங்கள்.

அன்பன்
வ.சுப. மாணிக்கம்

பேரன்புள்ள சாரங்கபாணி

நலம்; உங்கள் முடங்கல் வந்தது.

நண்பர் க.வெ. மறைவு தவிர்க்கவியலாதது. என்றாலும் மறக்க முடியாதது. அவரது நட்பும் உறவும் தூய்மையானவை; தமிழுக்கு உரமானவை. என் பருவத்தோடு ஒத்த நிலை நண்பர்கள் மெல்ல மெல்ல மறைகின்றனர். இறப்பு பேரியற்கையாகும். எனினும் வருத்தமும் இயற்கை யுணர்வாகும். அவர் புலமையும் துணிவும் போற்றற்குரியவை. எனினும் அவர் தொண்டினை நினைவோம். மதுரை சென்றிருந்தமையால் உடனே சிதம்பரம் வரவியல வில்லை.

தமிழ் வழிக் கல்வியியக்க ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நன்றாக நடந்தன. நம் தமிழ்க்கோள் தூயது. இன்றியமையாதது. நம்மால் நிறை வேற்றக்கூடியது. மூன்றாண்டில் தமிழ் வேலைக்கும் வாழ்வுக்கும் முதன்மைக்கும் உரியதாகும். அடுத்த ஊர்வலம் சென்னையில் அடுத்த திங்களில் நடைபெறும். மெல்லத் தமிழினிச் சாகும் என்று பாரதியார் பிறர்கூற்றாகக் கூறினார். அதற்குரிய குறிகள் தோன்றுகின்றன. ஆதலின் ஆற்றலொடு தமிழைக் காப்பதோடு எக்காலமும் இனி தளராதபடி ஆவன செய்ய வேண்டும். இடையூறுகளும் துன்பங்களும் நம்மவரிடமிருந்து பல வடிவில் வரும். எனினும் வெற்றி வாகை உண்டு.

அன்பன்

வ.சுப. மாணிக்கம்

---

பேரன்புள்ள மெய்யப்ப,

நலம். நேற்று சென்னையிலிருந்து வந்தேன். இரண்டொன்றைத் தவிரப் பெரும்பாலானவற்றை அச்சிட்டு வாங்கிவந்தேன். சுறுசுறுப்பாகச் செய்து முடித்தனர். எஞ்சிய சிலவும் விரைவில் அனுப்பி வைப்பார்கள். தங்கள் நன்கொடைப் பதிப்பு தில்லைபோல் வெற்றிதரும்.

தமிழ்க்கல்வி யியக்கம் பற்றிய அறிக்கை இதனொடு உண்டு. இது மூன்றாண்டுத்திட்டம். நம் இயக்கம் வினைத் தூய்மையானது; நமக்கு வேண்டும் வினைத்திட்பம் உண்டு. வினைசெயல் வகை அரிதில்லை. ஏராளமான பல்துறை நண்பர்கள் முன்வந்து துணை செய்வார்கள். முதற்கண் சிலதிங்கள் கருத்துபரவுதல் வேண்டும். நாடெங்கும் தழுவிய தூய இயக்கம் இது. எல்லோரும் அவரவர் கொள்கை போலவே ஈடுபடவேண்டும். செயல் முறைகளை முறையாகவும் துணிவாகவும் வகுத்துக் கொள்வோம்.

டாக்டர் ஆய்வினை முடித்துக் கொடுக்க வேண்டும். பிற நேரில்.

அன்பன்

வ.சுப. மாணிக்கம்

---




## பரிசு பெற்ற நூல்கள்

1. கம்பர் — டாக்டர் வ.சுப. மாணிக்கம்
2. வீரர் உலகம் — கி.வா. ஜகந்நாதன்
3. மணிக்கொடிகாலம் — பி.எஸ். ராமையா
4. பரிபாடல் திறன் — டாக்டர் இரா.சாரங்கபாணி
5. திருக்குறள் கூறும் உறுதிப்பொருள் — டாக்டர் சோ.ந.கந்தசாமி
6. உரையாசிரியர்கள் — மு.வை. அரவிந்தன்
7. ஊருக்குள் ஒரு புரட்சி — சு. சமுத்திரம்
8. உலகப் பெருங்கவிஞர் கம்பர் — இரா.வ. கமலக்கண்ணன்
9. தமிழ் மொழி வரலாறு — டாக்டர் சு. சக்திவேல்
10. திருமுறையும் திருக்கோயில்களும் — புலவர் செந்துறைமுத்து
11. தாகூர் — ச. மெய்யப்பன்
12. கலைவாணன் கவிதைகள் — கலைவாணன்
13. இசையியல் — வெற்றிச் செல்வன்
14. சுற்றுலாவளர்ச்சி — வெ. கிருட்டிணசாமி

## மூதறிஞர் வ.சுப. வின் நூல்கள்

| | |
|---|---|
| நாடகங்கள் | 1. மனைவியின் உரிமை |
| | 2. நெல்லிக்கனி |
| | 3. உப்பங்கழி |
| | 4. ஒரு நொடியில் |
| ஆராய்ச்சி | 5. தொல்காப்பியக் கடல் |
| | 6. திருக்குறட் சுடர் |
| | 7. சங்க நெறி |
| | 8. காப்பியப் பார்வை |
| | 9. இலக்கியச் சாறு |
| | 10. தமிழ்க் காதல் |
| | 11. வள்ளுவம் |
| | 12. கம்பர் |
| கவிதை | 13. கொடை விளக்கு |
| | 14. மாமலர்கள் |
| பிறவகை | 15. இந்திய ஆட்சிமொழிகள் (தலைவர்களுக்கு) |
| | 16. இரட்டைக் காப்பியங்கள் |
| | 17. உரைநடைத் திருக்குறள் |
| | 18. நகரத்தார் அறப்பட்டயங்கள் |
| English | 19. The Tamil concept of Love |
| | 20. A Study of Tamil Verbs |
| | 21. Collected Papers |
| | 22. Tamilology |

Wrapper Printed at Karpakam Achakam, Madras-600 002.